# கருத்தம்மா



பெண் குழந்தைகள் என்றாலே பெற்றோருக்குப் பாரம்தான் என்கிற கருத்தில், வழிவழியாக ஊறிப் போன கிராமம். அதனால், பெண் சிசுக் கொலைகள் என்பதை, வாழ்வின் சாதாரண விஷயங்களில் ஒன்றாகவே கருதுகிற மக்கள். இந்த ஆணாதிக்கச் செயலை எதிர்க்க முடியாததாலேயே அங்கீகரிக்கப் பழகிக் கொண்டு விட்ட பெண்கள்.

இவர்களுக்கிடையே குறுக்கிட்டு, பெண்கள் பாரமல்ல; அவர்களால் ஆண்களுக்கு நிகராகவும் - ஏன் - அதற்கு மேலாகவும் கூட பெற்றோரிடம் பரிவு காட்டி அவர்களைப் பாதுகாக்கவும் முடியும் என்று கதை சொல்லுகிறார், பாரதி ராஜா. கிராமத்துக் கருத்தம்மாவைப் புதுமைப் பெண்ணாக வீறு கொண்டு எழச் செய்து, ரத்தக்கறைகளோடு ஆணாதிக்கத்தை எதிர்க்கச் செய்கிறார்.

தான் கொல்லச் சொன்ன தனது மூன்றாவது குழந்தைதான் (கருத்தம்மாவின் தங்கை) தனக்குத் தெரியாமலேயே பட்டணத்தில் தத்துக் கொடுக்கப்பட்டு, டாக்டராக வந்து தனது உயிரைக் காப்பாற்றுகிறார் என்பதை உணரும் தந்தை, தனது தவறுக்காக வருந்துவதாகக் கதை வளர்கிறது. இவற்றோடு கலக்கிறது முக்கோணக் காதல்.

கொஞ்சம் கூட மிகைப்படுத்தப்படாத நிஜ கிராமம்; நிஜமான மனிதர்கள்; நிஜமான பேச்சு என்று எல்லாமே இயல்பாகப் படம்பிடிக்கப்பட்டிருக்கிறது. காமெடி டிராக் ஆறாவது விரல் போல் தனித்து நின்று அசிங்கப்படுத்தாமல், ஐந்து விரல்களுக்குள்ளேயே அடங்கியிருக்கிறது.

'தென்மேற்குப் பருவக் காற்று', தேனிப் பக்கம் மட்டுமல்ல; ரகுமானின் இசையில் நம் மனசுக்குள்ளும் வந்து வீசுகிறது.

கதாநாயகிகளின் தந்தையாக வரும் பெரியார்தாசன் நடிக்கவேயில்லை; அந்த கிராமத்து மொக்கையனாகவே வாழ்ந்து காட்டுகிறார் - ஏதோ நடிப்பு என்பது தமது ரத்தத்தோடு கலந்தே பிறந்த மாதிரி! பெரியார்தாசன் தனித்து நின்று பிரகாசிக்கிறார் என்பதாலேயே, மற்றவர்களெல்லாம் கொஞ்சம் மங்கலாகத்தான் தெரிகிறார்கள்.

இறந்து போன தங்கள் தாயின் சமாதியில், கருத்தம்மாவும் அவளது அக்காவும் நட்டு வளர்த்த மரத்தை, ஒவ்வொரு செயலுக்கும் சாட்சியாகக் காட்டும் போது, பாரதி ராஜா தனியாகப் பளிச்சிடுகிறார்.

ரொம்பவும் கேவலமானதொரு சமூகக் கொடுமையின் அசலான முகத்தைப் படம் பிடிக்கத் துணிந்த பாரதிராஜாவின் துணிச்சலுக்கு நமது மனமார்ந்த பாராட்டு.

இருப்பினும் இத்தனை அகல உழுததற்குப் பதில், பிரச்னையை இன்னும் கொஞ்சம் ஆழ உழுதிருக்கலாம் என்ற எண்ணத்தை மட்டும் தவிர்க்க முடியவில்லை.

— பிரின்ஸ்

# அடையாள அட்டை ஜோக்கடிக்கிறது!

கருத்து: ஜூலி
படங்கள்: செல்வம்

யோவ்! நீ கொண்டு வந்திருக்கிறது சேஷன் அட்டை! ரேஷன் அட்டைக்குத் தான் பாமாயில் தருவோம்

நீங்க ஒரு ஆளே, ஒரு மணி நேரமா மேக்அப் போட்டுக்கறேன்னு சொல்லி காக்க வைக்கிறது நியாயமா?

கி.பி. 2000ல், வாக்குச் சாவடியில்




உன் புது மோதிரம் போட்டோல விழணும்னு கையை மேலே தூக்காதே, கீழே போடு


அடையாள அட்டை கொடுத்தும், கள்ள ஓட்டு போட்டியா? எப்படி?


என் அட்டையே கள்ள அடையாள அட்டையாச்சே!




ஏன், செத்துப் போயிட்ட உங்க அப்பா பேர்ல ஒரு அடையாள அட்டை உனக்குத் தரணுமா?
ஆமாங்க! இத்தினி நாளா அவர் ஓட்டையும் சேர்த்து நான்தானே போட்டேன்!


நீங்க மந்திரியா இருக்கலாம். அதுக்காக முதல்வர் கால்ல விழறமாதிரி போட்டோவெல்லாம் அட்டையில ஒட்டித் தர சட்டத்துல இடமில்லை!

பிரதமர்
இந்த வரியாலதான் ஏதோ தகராறுன்னு சொன்னாங்க... ஒன்னுமே காணோமே...


அதிகப் பெரும்பான்மை 50 வரைக்கும்தானு எழுதச் சொன்னேன்... கிழிச்சுப் போட்டுட்டு மறுபடியும் எழுதிட்டு வாராங்க...
69
73
ஜெ
உச்சநீதி மன்றம்






# கல்கி



1994
டிசம்பர் 4
பவ
கார்த்திகை 18
மலர் : 53
இதழ் : 18


தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

# பிரேமானந்தா அரசியல்!

பிரேமானந்தா பற்றி பத்தி பத்தியாக எழுதி பத்திரிகைகள் காசாக்கிக் கொண்டிருக்கின்றன. ஆசிரமத்தில் நடந்த, கடும் தண்டனைக்குரிய கொடுமைகளை மிகைப்படுத்தும் போதும், தேவைக்கு அதிகமாக விலாவாரியாக விளக்கும் போதும் மக்களின் பலவீனங்களை பத்திரிகைகளும் பயன்படுத்திக் கொண்டு ஆதாயமடைவதாகவே கருதலாம். மக்களின் தகவல் பெறும் உரிமை துஷ்பிரயோகம் ஆகும் போது மக்களையே தாழ்வுறச் செய்யும். நிதானம் தேவை.

போலிச் சாமியார்கள் உலகத்துக்குப் புதுமை இல்லை. புராண காலத்திலிருந்து நாம் கண்டு வருகிற, மக்களுக்குச் சோதனையாக அமைகிற வேதனைகள்தாம். ராவணன், சந்நியாசி கோலத்தில் வந்ததும், சீதையே கூட ஏமாந்து போனாள் என்பதும் எல்லோரும் அறிந்த கதை. இத்தகைய கதைகளைக் கேட்டும் ஏராளமான சம்பவங்கள் பற்றி அறிந்த பிறகும் கூட, நாம் விழிப்புணர்ச்சி பெறாததுதான் பரிதாபம்.

ஆசிரமம், மடம் இவையெல்லாம் ஆன்மிக நோக்கிலும் சமுதாய சேவைக்கும் உருவானவை. இந்த நோக்கங்களுக்கு அப்பாற்பட்டு எப்போது பணம் குவிய ஆரம்பிக்கிறதோ, அப்போதே ஆபத்தும் நெருங்கக்கூடும் என்பதை மக்கள் உணர வேண்டும். சொத்துச் சேரச் சேர அதை ஆள்கிற ஆசையும் கூடவே வந்து விடும். வாரிசுப் போராட்டம் நிகழும். ஜனகர் போல் பற்றில்லாமல் அறம் சார்ந்து செல்வத்தை ஆள்வது என்பது அபூர்வமாகச் சிலருக்கு மட்டுமே இருக்கக்கூடிய மனோநிடம். ஒரு "துறவி" செல்வத்துக்கு அடிமைப்படுகிறார் என்பதை, அவர் சொந்த சுக சௌக்கியங்களை அதிகரித்துக் கொள்வதிலிருந்தே உடனடியாக உணர்ந்து மக்கள் எச்சரிக்கை அடையலாம்.

இன்று மேல்நாடுகளில் செல்வச் செழிப்பு உள்ள அளவில் மன அமைதி இல்லை. குடி, போதை மருந்துகள், அணு ஆயுத பயம், குடும்பப் பாசம் குறைந்து போனது முதலியன சஞ்சலம் உண்டாக்க, மக்கள் ஆறுதல் தேடி ஆன்மிக குருவை நாடி வருகிறார்கள். தங்கள் செல்வத்தை அவர் காலடியில் சமர்ப்பிக்கிறார்கள். உள்நாட்டிலும் லஞ்ச ஊழலும் தகிடுதத்தங்களும் அதிகரித்து விட, அநீதியான முறையில் பெறப்பட்ட செல்வத்தின் ஒரு பகுதியை நற்பணிகளுக்காக ஒரு துறவியிடம் அளித்து விட்டால் பாப விமோசனம் கிடைத்து விடும் என்று எண்ணுகிறார்கள். இப்படி குவியும் பணம் அந்தத் துறவிக்கே போதை ஏற்றி விடுகிறது!

தெய்வமாகி விட்ட காஞ்சி முனிவர் தம்மிடம் வருவோரின் பாவங்களைத் தாம் ஏற்றுக் கொள்வாரேயன்றி, காணிக்கை சமர்ப்பித்தால், "இதை இன்ன நல்ல காரியத்துக்கு நீயே பயன்படுத்தி விட்டு எனக்கு வந்து சொல்லு" என்று வழிகாட்டுவார். இந்த முறையில் அவரால் நடத்தப் பெற்ற, நடைபெற்று வருகிற அறப்பணிகள் கணக்கில் அடங்காதவை. இத்தகைய மனப்பக்குவம் எல்லோருக்கும் வந்து விடாது.

பணம் என்பது புனிதமான இடத்தைக் கூட மாசுபடுத்தி விடுகிறது. திருப்பதியில் பணம் சேரச்சேர, அதை என்ன பண்ணுவது என்று யோசித்து யாத்திரிகர்களுக்கு வசதிகளைப் பெருக்கினார்கள். இப்போது திருப்பதி ஒரு உல்லாசபுரியாகவே சிலரால் பயன்படுத்தப்படுகிறது என்பது கசப்பான உண்மை.

பிரேமானந்தா விவகாரத்தில், தன்னுடைய மானம் கப்பலேறினாலும் பரவாயில்லை என்று ஆசிரமத்தின் அவலங்களை அம்பலத்துக்குக் கொணர்ந்து, பேச முன்வந்த பெண்மணிதான் நம் முதல் மரியாதைக்கு உரியவராகிறார். அவரது துணிச்சலும் சமுதாய நலன் நோக்கும் பாராட்டுக்குரியன.

மாறாகக் கடும் கண்டனத்துக்கு உரியவர்கள், ஆசிரமத்துடன் தொடர்பு வைத்திருந்த தமிழக அமைச்சர்கள் சிலரும் முதல்வரின் அந்தரங்கத் தோழி சசிகலாவும் ஆவர். சசிகலா காரணமாக இந்தக் கண்டனம் முதல்வரையும் உள்ளடக்கியே தீர வேண்டும். முக்கியமான பொறுப்பில் உள்ளவர்கள், சாமானியர்கள் போல, 'எங்களுக்கு ஆசிரமத்தில் நடப்பதொன்றும் தெரியாது, ஏமாந்து போனோம்' என்று கூறித் தப்ப முடியாது. அதை விடக் கேவலம் மூடி மறைக்கும் வேலை.




• கார்ட்டூன் - நன்றி : நியூஸ்வீக்

ரூபாய்க்கு அரிசி போடுவோம்' என்று சொல்வதை கிண்டல் செய்கிறீர்களே, நீங்கள் மட்டும் எப்படி குழந்தைகளை பள்ளிக்கு அனுப்பும் குடும்பத்துக்கு இலவசமாகப் பத்து கிலோ அரிசி தரப் போறீங்க?"

"மத்திய அரசு மான்யங்களை குறைத்துக் கொண்டு வருகிற நிலையில், இரண்டு ரூபாய்க்கு அரிசி போடவே முடியாது. இதனால் துண்டு விழும் நிதிப் பற்றாக்குறையை எப்படி என்.டி.ஆர். ஈடுசெய்வாராம்? எதாவது திட்டத்தைச் சொல்லியிருக்கிறாரா? ஆனால் நாங்கள் அப்படியல்ல; அறிவொளி திட்டத்தில் ஏகப்பட்ட நிதி இருக்கு. பள்ளிக்குப் பிள்ளைகளை அனுப்பும் குடும்பத்துக்கு அந்த நிதியைப் பயன்படுத்தி பத்து கிலோ அரிசி கொடுப்போம்."

"ஆட்சிக்கு வந்த அரை மணி நேரத்தில் மதுக்கடைகள் ஒழிக்கப்படும்ன்னு' சொல்

'சே' என்றாகி விட்டது. ஸ்பீக்கர்களின் ஓலம் கிடையாது; கொடிகள், தோரணங்கள் மிஸ்ஸிங், அறுபதடி இல்லாவிட்டாலும், குறைந்தது ஆறடி கட்-அவுட்களாவது இருக்கிறதா என்றால் அதுவும் லேது. சரி, போகட்டும், சிவகாசிக்கு அல்வா கொடுக்கும் கலர், கலர் போஸ்டர்கள் இருக்கிறதா என்று சுவர்களைப் பார்த்தால் அதுவும் இல்லை. எல்லாம் சேஷன் கைங்கர்யம்.

# ஆட்சியைப் பிடிப்பாரா ஆந்திர 'அண்ணா'?



• ரேணுகா சவுத்ரி

காங்கிரஸ் அலுவலகம் இருக்கும் காந்தி பவனில் ஆட்களை எண்ணி விடலாம். வாசலில் இருக்கும் பீடாக் கடை கூட டல்லடித்துக் கொண்டிருந்தது. அலுவலகத்தில் உள்ளே நுழைந்த போது, "அந்த அறைக்குப் போங்க... ப்ரஸ் மீட் நடக்குது" என்று அனுப்பி விட்டார்கள்.

"இந்த சர்வேயெல்லாம் நம்பாதீங்க; காங்கிரஸுக்கு ஆதரவா மௌன அலை வீசிக்கிட்டிருக்கு" என்று ரகசியம் பேசுவது போல் சொல்லிக் கொண்டிருந்தார்கள், காங்கிரஸ் செய்தித் தொடர்பாளர்கள்.

பிரஸ் மீட் முடிந்ததும் தனியே அவர்களை ஓரங்கட்டினோம்.

"தெலுங்கு தேசம், கிலோ இரண்டு லியிருக்காரே, என்.டி.ஆர்.?"

"முன்பு இவர் ஆட்சியிலே இருக்கும் போதுதான் சாராயத்தில் பாக்கெட் கல்ச்சரை அறிமுகப்படுத்தினார். எங்க ஆட்சிதான் கவர், சாராயக் கடைகளை ஒழிச்சது. ஒயின் கடைகள்தான் பாக்கி இருக்கு. ஜனவரி ஒண்ணாம் தேதியிலிருந்து அதையும் நாங்கள் ஒழிச்சுடுவோம் (ஆட்சிக்கு வந்தால்)."

"தேர்தல் வந்தால், ஸ்திரத் தன்மை; ஒருமைப்பாடு என்று எடுத்து வுடறீங்களே! முன்பு கூட தெலுங்கு தேசம் ஏழு வருடம் ஆட்சியில் இருந்தது. தேசம் என்ன பிளவு பட்டுப் போய் விட்டதா? நீங்கள் சொல்லும் ஸ்திரத் தன்மை; நாட்டுக்கா அல்லது பிரதமருக்கா? என்று கேட்டதும் "ஏம்பா,

ஸாருக்கு ஸ்வீட் கொடுப்பா' என்று நமுட்டுச் சிரிப்புடன் எழுந்து கொண்டார்கள் செய்தித் தொடர்பாளர்கள்.

**வெ**ளியே வராந்தாவில் உள்ள அடுக்கடுக்கான அட்டைப் பெட்டிகளின் மீது தடுக்கி விழாமல் 'என்னவென்று' விசாரித்தோம். 'பிரபஞ்சனம்' என்னும் வீடியோ படம் ஸார். ஒரு தொகுதிக்கு பத்து கேஸட் அனுப்பறோம்."

தொகுதிக்கு தொகுதி செலவுகளை கண்காணிக்க ஆட்களைப் போட்டாலும், அனுமதிக்கப்பட்ட ஒன்றரை லட்சத்தை விட மூன்று நான்கு மடங்கு அதிகமாகச் செலவழித்தே தீர வேண்டியிருக்கிறது என்று எல்லா கட்சியினரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

**த**ன்னுடைய பலம் என்ன என்று தெரிந்து கொள்வதற்காக மொத்தம் உள்ள 294 தொகுதிகளில் 286ல் நிற்கிறது பா.ஜ.க. ''எந்தக் கட்சிக்கும் மெஜாரிட்டி கிடைக்காது. தொங்கு சட்டமன்றம்தான். அப்போது தான் எங்கள் முக்கியத்துவம் புரியும். தெலுங்கு தேசம் ஆகட்டும்; காங்கிரஸும் சரி, ரெண்டும் சொத்தைதான். எங்கள் நோக்கம் - சோரம் போய்க் கொண்டிருக்கிற கலாசாரத்தை கட்டிக் காப்பாத்தணும். தேசிய அளவில் காங்கிரஸுக்கு மாற்று நாங்கள்தான். ஆனால் எந்தக் கட்டத்திலும் காங்கிரஸுக்கு தோள் கொடுக்க மாட்டோம், சட்டமன்றத்துக்கு உள்ளேயும் சரி, வெளியேயும்தான்'' என்று சொன்னார் மாநில பா.ஜ.க. தலைவர் ராமாராவ்.

**எ**தைப் பற்றியும் கவலைப்படாமல், தனது சைதன்ய ரதத்தில் சிவபார்வதியுடன் அமர்ந்து மாநிலத்தை வலம் வருகிறர் 73 வயதான என்.டி.ஆர்.

"அண்ணாகாரு (இப்படித்தான் என்.டி. ஆரை வாஞ்சையுடன் அழைக்கிறார்கள் தெ. தேசத்தினர்) போற இடத்துல எல்லாம் பிரமாதமான வரவேற்பு. மணிக்கணக்கில் தாமதமானாலும், வெயிட் பண்ணி 'அண்ணா'வைப் பார்க்கிறார்கள் மக்கள். இப்பவே காங்கிரஸுக்கு தோல்வி ஜுரம் வந்து விட்டது" என்று சொன்னார் தெலுங்கு தேசக் கட்சியின் பிரச்சாரச் செயலாளர் ராமச்சந்திர ரெட்டி.

1983-ல் காக்கி பேண்ட், ஷர்ட் போட்டுக் கொண்டு பிரச்சாரம் செய்து வென்றார் என்.டி.ஆர். இப்போது செண்டிமெண்டலாக மீண்டும் காக்கி பேண்ட் ஷர்ட்டுக்கு மாறியிருக்கிறார். கடற்கரையோர ஆந்திர மாவட்டங்களில் அண்ணா காருவுக்கு கிடைத்த வரவேற்பு காங்கிரஸை கலக்கி இருக்கிறது. ஆனால் தெ. தேச கட்சியிலும் பிரச்னை இல்லாமல் இல்லை.

**வி**ஜயவாடாவில், என்.டி.ஆர். கூட்டத்துக்கு வந்த பொது ஜனம் ரொம்பவும் கம்மிதான். இதற்குக் காரணம், தொடக்க காலத்திலிருந்து தெலுங்கு தேசத்திலிருக்கும் காவண்டி சாம்ப சிவராவுக்கு என்.டி.ஆர். டிக்கெட் கொடுக்காததுதான்

• அஸப்நகர் தொகுதி : காங். பிரசாரம்



• என்.டி.ஆர்.





• விஜயபாஸ்கரரெட்டி



• ராமச்சந்திர ரெட்டி



• ராமாராவ் (பா.ஜ.க.)






என்கிறார்கள். அவர் சுயேச்சையாக நின்று தலைவலி கொடுத்துக் கொண்டிருக்கிறார். இதே போல் தெலுங்கு தேசத்துக்கு சோத னையாக முப்பது தொகுதிகள்.

தெலுங்கு தேசப் போட்டி வேட்பாளர் களை உற்சாகமூட்டும் வேலையைச் செய்து வருகிறார், என்.டி.ஆரால் கட்சியை விட்டு நீக்கப்பட்ட ரேணுகா சவுத்திரி. தவிர, "தெலுங்கு தேசம் இரண்டு" என்ற கட்சியை வைத்துக் கொண்டு 21 வேட்பாளர்களைக் களத்தில் இறக்கி இருக்கிறார்.

"அரசியலில் புதிய ஒரு எண்ண ஓட் டத்தை இளைஞர்களிடையே கொண்டு வரப் போகிறேன்" என்று ஆவேசமாகச் சொல்கிறார் ரேணுகா.

**கா**ங்கிரஸைப் பொறுத்தவரை பிரச் சாரத்துக்கு ஒரே ஸூப்பர் ஸ்டார் பிரதமர் தான். ஹெலிகாப்டரில் பறந்து மாவட்டத் தலைநகர்களிலும், முக்கிய நகரங்களிலும், மட்டுமே பேசுகிறார். உள்ளூர் கோஷ்டி பூசலினால் ஆட்களை திரட்டி வருவதிலும் கோளாறு. இருந்தாலும் விடுவாரா பிரதமர்? அவரைப் பொறுத்தவரை வாழ்வா, சாவா போராட்டம். சொந்த மாநிலத்தில் கட்சி தோற்றால் தேசிய அளவில் அவர் காலை வாரி விடத் தயாராக இருக்கிறார்கள். இதன் மறுபுறமாக ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்தவர் தேசத்தின் பிரதமராக இருப்பதைப் பெருமை யாக மக்கள் எண்ணுவதால் காங்கிரஸுக்கே வோட்டளிப்பார்கள் என்ற நம்பிக்கையும் நிலவுகிறது.

**ச**மீபத்தில் எடுக்கப்பட்ட 'இந்து' பத்திரி கையின் சர்வே, தெலுங்கு தேசம் சுலபமாக ஆட்சியைக் கைப்பற்றும் என்கிறது. "விஞ் ஞானபூர்வமாக எடுக்கப்பட்ட ஸர்வே இது" என்று சொன்னார் 'இந்து' ராஜேந்திர பிரஸாத். ஆனால் காங்கிரஸ் புள்ளிகள் இதைக் கிண்டல் செய்கின்றனர்.

இதற்கிடையில், ஜோசியர்களை அழைத்து பதவியேற்க நாள் பார்க்கச் சொல்லி விட்டாராம் என்.டி.ஆர்.

என்.டி.ஆரின் எழுச்சியைப் பார்த்து, காங்கிரஸ் கலங்கி நிற்பது பளிச்சென்று தெரி கிறது. ஆனால் தேர்தல் நெருக்கத்தில் காங் கிரஸ் என்ன உத்திகளைக் கையாளும் என்று சொல்ல முடியாது. அவைகளைப் பொறுத் துத்தான் ஆந்திர 'அன்னா' ஆட்சியைப் பிடிப்பாரா அல்லது மீண்டும் அரிதாரம் பூசப் போய் விடுவாரா என்பது நிர்ணயிக்கப் படும்.

— ஹைதராபாத்திலிருந்து : ப்ரியன்
படங்கள் : ராஜன்





# Kalki Shopping Page

உயர்ரக சுங்குடி

புடவைகள் மற்றும்

## ராணி சாரீஸ்

இந்த துணி லேபிலை

கவனித்து வாங்குங்கள்

**RANI SAREES**
**MADURAI - 12**
**R.A.M**

*தரத்தின் உத்திரவாதம்*

மதுரை

டெக்ஸ்டைல்ஸ்

2.சிவப்பிரகாசம் ரோடு,
பாண்டி பஜார், சென்னை-17.
(பிரில்லியண்ட் டுடோரியல் அருகில்)

## Follow Mee

**Designer Sarees**

*(The house of Exclusive Sarees)*

**Whole Sale**
**enquiries solicited**

***We accept***
**Citi Bank and**
**Central Bank Cards.**

Visit us at :
Shop No. 22, Gokul Arcade
No. 2, Sardar Patel Road,
Adyar, Madras - 20.
(Near Hotel Coronet.)



## Sree Krishna

**at 39, GODOWN STREET,**
**at HEART OF CITY**

**Sree Krishna Cut Piece Collection (P) Ltd.**

**No. 39, Godown Street, (Opp. Flower Bazaar),**
**Madras - 1 Tel : Off : 589596**

WHOLESALE & RETAIL AT MILLS PRICE

| | | |
|---|---|---|
| Stockist for Suiting<br>All cutpiece varieties | : | OCM, Digjam, Raymonds, Vimal, BSL,<br>Siyaram's, Gwaliar, Graviera, Sangam |
| Stockist for Shirting<br>All cutpiece varieties | : | Beekalene, Madura, Tunicas, K. L. Fab, Surya,<br>Ajantha, Samrath,Oxford, Orkay, Gini. |
| Stockist for Sarees | : | Fancy Sarees, Vimal, Vipul, Khatau,<br>Santosh Sarees & Matching blouse bits<br>2 x 2 & Rubia Chiffon, Gini, Madura, Uniform. |

**(KICK YOUR JOB INVEST RS. 5,000/- AND EARN Rs. 50,000/- YEARLY.)**

SUNDAY'S ALSO SHOP OPEN

NO BRANCH AT PURASAWALKAM RETAIL AREA.

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

## நீங்கள் கேட்டவை - தராசு

• மனோமணாளன், கோவை.

*? கவலை இல்லாத மனிதன் யார்?*

! சத்தியமா நான் இல்லீங்க!

• டி. எஸ். திரவியம், தேனி.

*? தமிழகத்தில் நடந்து கொண்டிருப்பது பொற்கால ஆட்சியா? இருண்ட கால ஆட்சியா?*

! ஆள்பவர்களுக்குப் பொற்காலம்; ஆளப்படுகிறவர்களுக்கு இருண்ட காலம்!

• த. குணசேகரன், கவுந்தப்பாடி.

*? பிரியங்கா மணக்கப் போவது ஒரு கிறிஸ்துவராமே?*

! இருந்து விட்டுப் போகட்டுமே!

• ப. சுப்பிரமணி, திருச்சி.

*? சமீபத்தில் உங்களைப் பாதித்த செய்தி?*

! கதர், கிராமத் தொழில் வாரியத்திலும் கோடிக்கணக்கில் ஊழல் என்ற தகவல். கதரும் கிராமத் தொழில்களும் புனிதமான லட்சியங்களாக ஒரு காலத்தில் இருந்தன. ஏழை, எளிய மக்களின் தொழில்கள். அதிலுமா தில்லுமுல்லு! சே!

• புளியரை கணேசன், சென்னை.

*? "ஜெயின் கமிஷன் விசாரணை தொடங்கி மூன்று ஆண்டுகள் சென்றும் இன்னும் ஒரு உண்மை கூடக் கண்டுபிடிக்கப்படவில்லை என்பதால் இந்தியாவின் மனச்சாட்சி கதறி அழுகிறது" என்ற நீதிபதி ஜெயினின் வேதனை பற்றி...?*

! இந்த நாட்டுக்கு மனச்சாட்சி ஒன்று இருக்கிறது என்று

• மணக்கப் போவது...

• உடன் ஒப்புதல்...

# ஏஜ. அமைச்சரவையில்

• லாஜிக் உதைக்கிறதா?

நினைவூட்டிய நீதிபதிக்கு நன்றி. முன்னாள் பிரதமரின் கோரக் கொலை குறித்த விசாரணைக்கே இந்தக் கதி என்றால் இந்நாட்டின் சராசரி மக்களுக்கு நீதி கிடைக்க எவ்வளவு காலதாமதமாகும் என்பதையும் மனச்சாட்சியுள்ளவர்கள் எண்ணிப் பார்க்கட்டும்.

• சுந்தர் அழகேசன், திருச்சுழி.

*? கல்கியில் பார்த்திபன் கனவுக்கு கோபுலுவின் வண்ண ஓவியங்கள் சூப்பர். இவை முன்பே வரையப்பட்டனவா? அல்லது இப்போதைய மறுபிரசுரத்துக்காக வரையப்படுகின்றனவா?*

! முதல் முறை வர்மாவும் இரண்டாம் முறை வினுவும் பார்த்திபன் கனவுக்குப் படம் வரைந்தார்கள். தற்போது கோபுலுவின் பிரத்யேகப் படங்களுடன் வெளிவருகிறது. ஒத்துழைக்கக் கோரியதும் ஆர்வத்துடனும் உற்சாகத்துடனும் உடன் ஒப்புதல் அளித்தார், பத்திரிகைத் துறையில் பொன் விழா கண்ட ஓவியர்.

• ம. செந்தில்நாதன், மதுரை.

*? "சினிமாவை ஒரு மாதம் நிறுத்தினால் போதும்; நாட்டில் சட்டம் ஒழுங்கு கெட்டு விடும்" என்ற சிவாஜிகணேசன் கருத்து பற்றி?*

! ரொம்ப வருஷங்களுக்கு முன்னால் திரை உலக "மேதை" ஒருவர், "நாங்கள் பேட்டை ரவுடிகளையெல்லாம் சினிமாவினால் கவர்ந்து, தியேட்டருக்குள் வைத்திருப்பதால்தான் நாட்டில் அமைதி நிலவுகிறது" என்று சொன்னது நினைவு வருகிறது. சிவாஜியின் 'லாஜிக்' சரியென்று கொள்வோமாயினும் இவ்வளவு சினிமாக்கள் தடையின்றி ஓடிக் கொண்டிருக்கும்போதே இன்று சட்ட ஒழுங்கு இவ்வளவு சீர்கெட்டிருப்பதானது இன்றைய சினிமாவின் தரத்துக்குச் சான்று.

• எஸ். மங்களம், கும்பகோணம்.

*? காதலன் படத்துக்குத் தடைவிதிக்கக் கோரி இரா. அன்பரசு நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்திருப்பது பற்றி...?*

! வசூல் 'டல்' அடிக்க ஆரம்பித்த சமயம் இந்தச் செய்தி வர, மறுபடி

• காதலனுக்குத் தடை!

சுறுசுறுப்பு. 'லக்'குத்தான்!

● பி. ராஜமகேசுவரன், தஞ்சாவூர்.

*? தமிழக அரசுக்கு எதிராக ஒரு கோடி பேர் கையெழுத்து இயக்கத்தை யொட்டி மத்திய அரசு விசாரணை கமிஷன் அமைக்குமா?*

! அமைக்குமோ இல்லையோ, அமைக்கப்பட வேண்டும் என்று சொல்வதில் தயக்கமில்லை. மதுரை காங்கிரஸ் பிரமுகர் கோவிந்தராஜன், இயக்கத்துக்கு உதவ முன்வந்த திருநாவுக்கரசு போன்றவர்கள் கைதாவது மாநில அரசு கலங்கிப் போயிருப்பதையே சுட்டுகிறது.

● விமோ, நெல்லிக்குப்பம்.

*? ஜெ அமைச்சரவையில் திடீர் மாற்றம் ஏன்?*

! திடீர் ஒன்றுமில்லை, ரொம்ப நாளாகவே இலாகா மாற்றம் மூலம் தமது அதிருப்தியை சில அமைச்சர்களுக்குத் தெரியப்படுத்தும் எண்ணம் ஜெக்கு இருந்துதான் வந்திருக்கிறது. ஆனால் ஆளுனரிடம் ஒப்புதலுக்குப் போனால் தம் முகத்தில் கரிபூசி விடுவாரோ என்கிற பயம். எனவே கலந்தாலோசித்து குறுக்கு வழி கண்டுபிடித்திருக்கிறார். ஓர் அவசரத்துக்கு மட்டுமே கையாள வேண்டிய முறையைப் பின்பற்றி மந்திரிகளை இடமாற்றி ஆளுனரையும் அவமதித்து இருக்கிறார். பிரதமரோ, "ஆளுனர் - முதல்வர் மோதலா? எனக்கொன்றும் தெரியாதே" என்கிறார். யாரிடம் சொல்லி அழ!

● சோ. மு. பிச்சையன், திருப்பனந்தாள். ❑

*? தேர்தல் ஆணையத்தின் கண்டனத்தை மதித்து சீதாராம் கேசரியும் கல்பனாத் ராயும் அமைச்சரவையிலிருந்து நீக்கப்படுவார்களா?*

! சேஷனின் கண்டனத்துக்கு காங்கிரஸ் கட்சி பதில் கண்டனம் தெரிவித்து விட்ட நிலையில் இது எப்படி சாத்தியம்? சேஷனே, "ஒரு யோசனையாகத்தான் சொன்னேன், உத்தரவாக அல்ல" என்று ஜகா வாங்கி விட்டாரே! நிற்க, இரு அமைச்சர்களுமே தவறு செய்திருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால் சீதாராம் கேசரி முஸ்லிம்களுக்கு தனித் தொகுதி கோரியது அதிகாரபூர்வமான தேர்தல் அறிவிப்புக்கு முன்னர் என்பதால் மன்னிக்கலாம். கல்பனாத் ராய் கூடுதல் சர்க்கரை கர்நாடகா, ஆந்திரா மாநிலங்களுக்கு ஒதுக்கியது பெருங்குற்றமே. விஜயபாஸ்கர ரெட்டியும், "என்.டி. ஆர். ஆட்சிக்கு வந்தால் மாநிலத்துக்கு மத்திய அரசின் ஒத்துழைப்பு கிடைக்காது" என்று பிரசாரம் செய்வது ரொம்பத் தப்பு.

# திடீர் மாற்றம் ஏன்?

❑ ரூ 25 பரிசு பெறுபவர் : சோ. மு. பிச்சையன், புதுத் தெரு, தெற்கு வீதி, திருப்பனந்தாள்.

● செந்தில்வேலன், சங்கராபுரம்.

*? இந்திய கிரிக்கெட் அணியில் மீண்டும் இடம்பெற்றுள்ள மஞ்ரேகர் குறித்து?*

! சரியான தேர்வு என்பதை முதல் டெஸ்ட் வெற்றியில் அவரது 51-ம் 66-ம் நிரூபித்து விட்டனவே. ஸ்ரீநாத்தின் 60ம் நாலு விக்கெட்டுகளும் "மேன் ஆஃப் தி மேட்ச்" பட்டம் பெற்றுத் தந்தாலும் மஞ்ரேகரின் ஆட்டம் டெக்னிகலாக அப்பழுக்கற்றது.

● ஆர். பி. சலம், காரைக்குடி.

*? அம்மா தாயே சரணம்; ஆண்டாளின் மறுபிறப்பே சரணம்... தொடருங்கள் பார்ப்போம்?*

! ஸாரி, நான் கற்ற லலிதாசகஸ்ரநாமம் வேறு.

● கி. பாஸ்கர், சென்னை.

*? இந்திய ராணுவ தளபதி ஜோஷியின் மரணம் குறித்து?*

! பல போர்க்களங்களைக் கண்ட மாவீரர்; ஐநாவின் அமைதிப் பணிகள் பலவற்றில் பங்கேற்ற அமைதிக் காவலர்; நமது ராணுவத்தை நவீனமாக்கும் முயற்சியில் தீவிரம் காட்டிய சிறந்த நிர்வாகி; பல்கலைக் கழகம் எதிலும் படிக்காத போதிலும் கல்வியாளருக்கும் சிலவற்றைக் கற்றுத் தரும் தகுதி பெற்ற அறிஞர்! எனவே, சென்னை பல்கலைக் கழகத்தில் பாதுகாப்புத் துறையில் முதுகலைப் பட்டதாரி. ஜோஷியின் மறைவு பேரிழப்பு என்பது புரிந்திருக்குமே.


• அமைச்சரவையி லிருந்து...


• ...நீக்கப்படுவார்களா?


• மறைவு பேரிழப்பு

• சரியான தேர்வு





சினிமா திரையைத் தாண்டி வாழ்க்கைக்குள் நுழைந்து விட்டது டான்ஸ். அழைப்பின் பேரில் சென்று நடனமாடிக் களிப்பூட்டும் அமெச்சூர் மாணவ நடன க்ரூப்புகள் தோன்றியுள்ளன; கிரிக்கெட் அரங்கத்தில், இந்திய வெற்றியைக் கொண்டாட ஆயிரமாயிரம் 'பிரபு தேவாக்'கள் இடுப்பசைக்கிறார்கள்; சினிமா தியேட்டர்களில், சுண்டியிழுக்கும் மெட்டுகள் ஒலிக்கும் போது ஆண்களுக்குச் சளைக்காமல் பெண் ரசிகர்களும் எழுந்து ஆடுகிறார்கள்...!

இந்த "டான்ஸ் ஃபீவர்" பற்றி இங்கு விவாதிப்பவர்கள் ஆர். வித்யாலட்சுமி, ஜே. பிரசன்னா, கீதா நாதன், ஆர். மகாலட்சுமி.

**கீதா நாதன் :** இன்னைக்கு டான்ஸ் பண்ற இளைஞர்களெல்லாம் ஏதோ ஒரு வகையில கட்டுப்பாடை உடைக்கணும்னு தான் ஆடறாங்கன்னு தோணுது. நாங்க சுதந்திரமா இருக்கோம், துணிச்சலா இருக்கோம்'னு உணர்த்தறதுக்காக அப்படி ஆடறாங்க...

**பிரசன்னா :** அப்படி இல்லை... டான்ஸ் ஆடுறதுக்கு என்ன பிரமாத துணிச்சல் வேணும்ங்கறீங்க?

**கீதா :** பல வகையில கட்டுப்பட்டு இருக்கீங்க. அதனால வீட்டில் செய்ய முடியாததை வெளியில செய்யறீங்க. அதுவும் நாலு



# கலக்குது பார் நம்ம ஜெனரேஷன்!

பேரா சேரும் போதுதான்... தனியா யாரும் டான்ஸ் ஆடறதில்லை.

**பிரசன்னா :** நாலு பேர் சேர்ந்தாத்தான் ஆடுவோம்ங்கறது சரி. ஆனா, ஏதோ மனோ தத்துவ காரணம்லாம் சொல்றீங்க - அதைத் தான் ஒத்துக்க முடியாது. எங்களுக்கு உற்சாகமா இருந்தா ஆடறோம்; அவ்வளவுதான். உதாரணமா, எனக்கு வீட்ல பெரிய கட்டுப்பாடு, பிரச்னையெல்லாம் கிடையாது. என் க்ரூப்ல ஜமா சேர்ந்தா நான் ரொம்ப இயல்பா ஆடுவேன்.

**மஹாலஷ்மி :** மத்தவங்களை attract செய்யத்தானே ஆடறீங்க?

**வித்யாலக்ஷ்மி :** ஆமாம், கவர்றத்துக்காகவும் பெண்களைச் சீண்டறதுக்காகவும் ஆடறாங்க.

**பிரசன்னா :** அப்படி இல்லவே இல்லை; யாராவது பார்க்கிறாங்களா இல்லையா என்கிற கவலையெல்லாம் எங்களுக்குக் கிடையாது; நாங்க பாட்டுக்கு ஆடுவோம். அப்புறம் பெண்களை டீஸ் பண்றது... அதை வேணும்னு செய்யறதில்லை; டான்ஸுக்கான எல்லா பாட்டுமே அப்படித்தான் அமைஞ்சிருக்கு. அதுக்கு நாங்க என்ன செய்ய முடியும்? அது சரி நீங்க மட்டும் ஆண்களைக் கிண்டலடிக்கறதில்லையா?

**மஹாலக்ஷ்மி :** நீங்கதான் ஓவரா போறீங்க....

**கீதா :** இந்த விவாதத்தை விட்டுட்டு டான்ஸுக்கு வருவோம். இப்பல்லாம் பெண்களும் டான்ஸ் பண்றாங்க இல்லையா....?

**வித்யா :** பண்ணுவோம். ஆனால் பொது இடத்துல டான்ஸ் பண்ண ரொம்ப யோசிப்போம். அப்படிப் பண்ண முடியாதுன்னே கூட சொல்லலாம். எக்ஸ்கர்ஷன், டூர் மாதிரி கும்பலா போகும் போது அந்த இடங்கள்ல வேணா கொஞ்சம் துணிச்சலா ஜாலிக்காக ஆடலாம்.



**பிரசன்னா :** பொது இடங்கள்ல ஆடக் கூடாதுன்னு ஒண்ணும் சட்டம் இல்லையே... ஆனால், நீங்கதான் பொது இடங்கள்ல அதிகம் ஆடறீங்க.

**வித்யாலட்சுமி :** மத்தவங்களுக்கு தொந்தரவு குடுக்கக் கூடாதுன்னு சட்டம் இருக்கே. முக்கியமா தியேட்டரில் ஆடும் போது மத்தவங்களுக்குத் தொந்தரவாயிருக்கேன்னு யோசிக்க மாட்டீங்களா?

**பிரசன்னா :** நீங்க ரஜினி படம் ஃபர்ஸ்ட் டே ஃபர்ஸ்ட் ஷோ பார்த்திருக்கீங்களா? அன்னிக்கு எல்லாரும் பாடி, ஆடி கொண்டாடத்தான் தியேட்டருக்கே வருவாங்க. அந்த உற்சாகமே தனி. அமைதியா படம் பார்க்கணும்னா பொறுத்திருந்து வீட்ல டெக்குல, டீவியில பார்க்க வேண்டியது தான். மேலும் தியேட்டர்ல ஆடாதவங்க கூட படத்தோட எங்களையும் சேர்த்து ரசிப்பாங்க.

**மஹாலட்சுமி :** ஆக, அப்படி அவங்களை ரசிக்க வைக்கணும்னுதானே ஆடறீங்க...?

**பிரசன்னா :** கிடையாது. எங்க உற்சாகத்துல ஆடறோம். அடுத்தவங்க ரசிச்சா ஓ.கே. இல்லைன்னாலும் பரவாயில்லை. இப்பல்லாம் தியேட்டர்ல பெண்களும் ஆடறாங்க.

**கீதா :** பெண்கள் ஆடறதைப் பத்தி நீங்க என்ன நினைக்கறீங்க பிரசன்னா....?

**பிரசன்னா :** அவங்களுக்கு ஆட உரிமை இருக்கு, ஆடறாங்க.

**கீதா :** சரி, அப்படி பொது இடத்துல ஆடின ஒரு பெண்ணையே உங்களுக்கு கல்யாணத்துக்குப் பார்க்கறாங்கன்னு வைச்சுக்குவோம், நீங்க சம்மதிப்பீங்களா?



புரட்சி செய்திருக்கிறது நாகபுரி பல்கலைக் கழகம்! பல்கலைக்கழக வளாகத்திலேயே ஒரு 'ரெஸ்டாரண்ட்', ஒரு திறந்த வெளி 'பார்' ஆகியன ஆரம்பிக்க முடி வெடுத்துள்ளது. பிறகென்ன, மாணவர்கள், மேதைகளாகாவிட்டாலும் போதைகளாவார்கள் அல்லவா?''

ஆதாரம் : ஸண்டே
— சம்பத் குமாரி

**பிரசன்னா** : வேற வழி கிடையாது. இனிமேல் இதையெல்லாம் சகஜமா ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான்.

**கீதா** : விரும்பி, ஏத்துக்கறதுக்கும் வேறு வழி கிடையாதுன்னு ஏத்துக்கறதுக்கும் வித்தியாசம் இருக்கு....

**வித்யா** : தெரிஞ்சவங்க கண்ல படுகிற மாதிரி பெண்கள் அப்படியெல்லாம் ஆடிட மாட்டாங்க. வீட்ல திட்டுவாங்க, நாளைக்குக் கல்யாணமெல்லாம் பிரச்னையாகும் என்கிற பயமெல்லாம் எங்களுக்கு இருக்கு.....

**மஹாலட்சுமி** : பிரபு தேவாவுக்கு அப்புறம்தான் டான்ஸ் இவ்வளவு பாப்புலர் ஆகியிருக்கு.....

**பிரசன்னா** : ஆனால் நாங்க ஆடறது பிரபு தேவா ஆடற மாதிரி டான்ஸ் இல்லை; வெறும் டப்பாங்கூத்துதான் ஆடறோம். இது ரொம்ப ஈஸி, பயிற்சியெல்லாம் தேவையில்லை.....

**வித்யாலட்சுமி** : பிரபு தேவா ஸ்டைல்ல ஆடலைன்னாலும் அவர்தான் பல பேருக்கு இன்ஸ்பிரேஷன். பெரியவங்க, சின்னவங்க, பொடிசுக எல்லாரையும் கவர்ந்து ஆச்சரியத்தோட டான்ஸைப் பார்க்க வைச்சிருக்கார்.

**கீதா** : அதை ஒப்புக் கொள்ளத்தான் வேணும்; கொஞ்சம் நேரம் நம்மை பிரமிக்க வைக்க, கட்டித்தான் போடுறார். ஆனா திரும்பத் திரும்ப அதையே பார்க்கும் போது சலிச்சுப் போகுது. சில அசைவுகளெல்லாம் ரொம்ப ஆபாசமா வேற இருக்கு... அதைப் பார்த்து இளைஞர்கள் மட்டுமில்லை, சின்ன குழந்தைங்க கூட ஆடறாங்க.

**மஹாலட்சுமி** : எனக்கொண்ணும் ஆபாசமா தெரியலை. அதெல்லாம் டான்ஸோட ஒரு அம்சமாத்தான் நினைக்கறேன்.

**வித்யாலட்சுமி** : எதிர் காலத்துல டான்ஸ் எப்படி இருக்கும்னு நினைக்கறீங்க.....?

**கீதா** : டான்ஸே இருக்காதுன்னு நினைக்கிறேன். இப்ப டான்ஸ் இவ்வளவு பிடிச்ச விஷயமா இருக்கிறதுக்கு டீ.வியும் ஒரு காரணம். டீ.வி மூலமா சௌகரியமா, சீக்கிரமா டான்ஸ் நம்மை ஆக்கிரமிச்சுக்கிட்டிருக்கு. இந்த மோகம் குறைஞ்சு, மறைஞ்சு போயிடும் - நம்மை வெளிப்படுத்திக்கறதுக்கு வேற ஏதாவது வழி கண்டு பிடுச்சுக்குவோம்.

**பிரசன்னா** : நான் அப்படி நினைக்கல்லை. இந்த டப்பாங்கூத்து ஸ்டைல் டான்ஸ் காலத்துக்கும் அழியாது. பிரபு தேவா போய் வேறு ஒரு டான்ஸ் ஹீரோ வரலாம் - ஆனா இளைஞர்கள் ஆடறதை ஆடிக்கிட்டேதான் இருப்பாங்க.

**மஹாலட்சுமி** : தயக்கமும் கூச்சமும் படிப்படியா குறைஞ்சிக்கிட்டு வருது. அதனால எதிர் காலத்துல ஆண்களும் பெண்களும் சேர்ந்தே கூட டான்ஸ் பண்ணுவாங்களாயிருக்கும்.

தொகுப்பு : **துளசி**

அட்டையில் ஆடுவோர் : **ஸ்ரீராம், சுஜாதா, சங்கமித்ரா.**

வண்ணப்படம், படங்கள் : **யோகா**







அம்பை தேவா

# அறிவை டெபாஸிட் இழக்கச்



கனவு மெய்ப்படும் – 13

மனிதர்களில் பல பேர் வாழ்க்கை ஓட்டத்தின் வேகத்தில் மூழ்கிப் போகிறார்கள். அல்லது தத்தளித்துத் தடுமாறுகிறார்கள். மிகச் சிலர்தான் வெற்றிகரமாக நீந்தி விடுதலை பெறுகிறார்கள்.

பலர் மூழ்கிப் போவதற்கும் சிலர் நீந்தி விடுதலை பெறுவதற்கும் என்ன காரணம்? மனிதனிடத்திலே இருக்கும் மூன்று முக்கியமான கருவிகளைக் கையாளும் முறையே அவரவர் வெற்றி தோல்விக்கான காரணங்கள்.

மனம், அறிவு, பொறிகள் என்னும் மூன்று முக்கியக் கருவிகள் நம்மிடம் உள்ளன. மனம் அறிவுக்குக் கீழ்ப்படிந்து, அறிவின் வழி காட்டுதல்படி பொறிகளை ஏவல் கொள்ளத் தொடங்கினால் விடுதலை கிடைக்கும் - அறிவு முடிவெடுக்க, மனது செயலாக்க வாழும் வாழ்க்கை யோகியின் வாழ்க்கை. நேர்மாறாக பொறி புலன்கள் வழிகாட்ட மனது அவை வழி சென்று கூத்தடித்தால் அறிவு விலகிப் போகிறது! மனமும் புலன்களும் கூட்டணி வைத்துக் கொண்டு அறிவை எதிர்த்தால் அறிவுக்கு டெபாஸிட் தேறாது - வாழ்க்கை நாசமாவதைத் தவிர்க்க முடியாது.

ஸ்திதப்ரக்ஞன் புலன்கள் மீது முழு ஆளுமை உடையவன். இது கருதியே "எல்லா உயிர்க்கும் எது இரவோ அப்போது யோகி விழித்திருக்கிறான். உயிர்கள் எல்லாம் துய்த்துணரும் விழிப்பு நிலை முனிக்கு இரவு" (அத்2-69 சுலோகம்) என்கிறது கீதை. இதை எல்லோரும் தூங்கும் போது ஞானி விழித்திருக்கிறான். எல்லோரும் விழித்திருக்கும் போது அவன் தூங்குகிறான் என்று அபத்தமாக அர்த்தம் பண்ணிக் கொள்ளக் கூடாது. அப்படிப் பார்த்தால் இரவு தூங்காமல் விழித்திருக்கும் திருடர்கள் எல்லாம் ஸ்திதப்ரக்ஞன் ஆகி விடுவார்களே!

தூக்கம் என்றால் என்ன பொருள்? புலன்கள் செயல்படாமல் இருக்கும் பொழுது விளையும் இன்ப நிலைதான் தூக்கம். விழிப்பு...? புலன்களை உணர்ந்து நிற்கும் உயிர்ப்பு நிலை. சராசரி மனிதர்கள் உடல் இன்பங்களில், விழிப்பாக இருந்து ஆத்ம ஞானத்தில் தூங்கி

வழிகிறார்கள்.

ஞானிகள் ஆத்ம விஷயத்தில் விழிப்பாக இருந்து சரீர இன்பங்களில் ஒதுங்கி உறங்கி விடுகிறார்கள்.

எனவே ஸ்திதப்ரக்ஞனாக விளங்கி, சமநிலை அறிவில் பொருந்திய கர்மயோகத்தை, ஸ்வதர்மத்திலிருந்து விலகாமல் செய்வதே இதுநாள் வரை நாம் விளக்கிச் சொன்ன விவரங்கள். இத்தகைய கர்மயோகியின் வாழ்க்கையே ஒரு புனித வேள்வி. ஒரு ஞான யக்ஞம்.

மனிதன் ஒவ்வொரு நாளும் ஐந்து வகை யாகங்களைச் செய்தாக வேண்டி உள்ளது. தேவயக்ஞம், ரிஷியக்ஞம், பித்ருயக்ஞம், நரயக்ஞம், பூதயக்ஞம் என்பன அவை.

இந்த யக்ஞங்கள் வேள்விச் சாலை யாகங்களைப் போலவே புனித மானவை. அதை விடவும் அவசியமானவை. யக்ஞம் என்ற சொல்லுக்கு ஆழமான பொருள் உண்டு. 'தம் விளைவுகளால் வினைபுரிவோனைக் கட்டுப்படுத்தாத வினைகள் (செயல்கள்) எல்லாம் யக்ஞங்கள். எனவே 'ஒவ்வொரு செயலையும் வேள்வியாகச் செய்' என்கிறது கீதை.

எந்தவித எதிர்பார்ப்பும் இன்றி வணங்கும் நிறைவுக்காகவே இஷ்ட தெய்வத்தை வணங்குதல் தேவயக்ஞம். உலக நன்மைக்காகவே முனிவர் களும் ரிஷிகளும் அருளிய நூல்களைப் பயிலுவது, ஓதுவது, ஆராய்வது, பிறர்க்கு எடுத்துரைப்பது என்பது ரிஷியக்ஞம் அல்லது பிரம்ம யக்ஞம் எனப்படும். பெற்றவர்களுக்குப் பணிவிடை செய்தல், அவர்கள் கருத் தறிந்து நடத்தல், அவர்தம் பெற்றோரை (இறந்தாலும்) எண்ணி எண்ணி நன்றி பாராட்டி வழிபடுதல் ஆகியவை பித்ருயக்ஞம் - நம் குல முன்னை வர் குறித்துச் செய்யப்படுவது இது. அற்றார் அழி பசி நீக்குதல், கல்வி தருதல், மருந்து தருதல், நோய் நீக்கல் என்ற மனிதகுல நன்மைக்கான நமது தியாகச் செயல்கள் நரயக்ஞம் என்றாகிறது.

மற்றைய உலக உயிர்களைப் பேணுதல், அவற்றுக்கு உதவி செய்தல் பூதயக்ஞம் எனப்படும். இவையே பஞ்சமகா யக்ஞம் எனப்படும்.

திரும மகாராஜா நடத்திய தடபுடலான யாகத்தைப் பலர் புனித மானது என்று பாராட்டிக் கொண்டிருந்த போது, பாதி பொன்னிறமான கிரிப் பிள்ளை ஒன்று ஓடி வந்தது. யாக சாலையில் புரண்டு புரண்டு பார்த்து விட்டு 'இந்த யாகம் புனிதமானது என்பது பொய்' என்று பாராட்டிப் பேசியவர்களைக் குற்றம்சாட்டியது. பின்னர் அதுவே விளக்கியது.

பஞ்சம் தலைவிரித்தாடிய ஒரு நாட்டில் ஏழை பக்தர் ஒருவர் - மனைவி, மகன், மருமகளுடன் வாழ்ந்து வந்தார். பல நாள் பட்டினிக்குப் பிறகு பிட்சையாகக் கொஞ்சம் கோதுமை மாவு கிடைத்தது. நான்கு ரொட்டிகள் தயாரித்து, இறைவனுக்கு நிவேதனம் செய்து விட்டு பிர சாதத்தை உண்ண உட்கார்ந்தனர். எங்கிருந்தோ வந்த அதிதி ஒருவர் பசிக்கிறது என்றார். பக்தர் தம் பங்கு ரொட்டியைப் பணிவோடு படைத் தார். அதிதிக்கு மேலும் பசி எடுத்தது. மனைவியும், மகனும், மருமகளும் தத்தம் பாகத்தைப் பக்தியோடு அவருக்குப் பரிமாறினர். ஆசீர்வதித்து அதிதி போனார். இவர்களோ பட்டினி கிடந்து பரகதி சேர்ந்தனர். அந்த ரொட்டி தயாரிக்கும் போது சிந்திய மாவில் புரண்ட போது, கீரி உடம்பு பாதி பொன்னிறம் பெற்றது. அந்த வேள்வி போல் புனித மான வேள்வி நிகழிடத்தில் மீதி உடம்பும் பொன்னாகும் என்று தேடி அலைந்த கீரிக்குத் தருமரின் வேள்விச் சாலையில் அந்தப் பரிசு கிடைக்க வில்லை!

பக்தரின் பட்டினி எப்படி வேள்வி ஆயிற்று? உயிர் வாழ்தல், உணவைப் பெறுதல், அதைப் பிறர்க்கு ஈதல், மாய்தல் எல்லாமே அவ ருக்கு ஒரு பெரு வேள்வி ஆனது: செயல் அனைத்தும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்வதே யாகம். எனவே யோகம் செய்வோன் வாழ்க்கை முறையே யாகம் செய்யும் வழிமுறை ஆகிறது.

**சுகிசிவம்**

**செய்யும் அபாயக் கூட்டணி!**

# சிகரெட் துண்டு

போட்டிக் கதை - 13

"பெல்லடிச்சா உடனே வந்து கதவைத் திறக்கக் கூடாதா...? ஆடி அசைஞ்சுகிட்டு வந்து தொறக்கிறே...?"

அகாலத்தில் வீடு திரும்பிய அதியமான் மனைவியிடம் சீறினான்.

அந்தச் சீறல் நிஜமில்லை. தன் மீது தாக்குதல் தொடுக்கக்கூடும் என்ற பயத்தில் முந்திக் கொண்டு எதிரியைத் தாக்கி, நிலைகுலையச் செய்து தன்னை தற்காத்துக் கொள்ளும் போர்த் தந்திரம் அது.

அதியமான் அதைக் கச்சிதமாக செய்தான். அவன் எதிர்பார்த்தது போலவே வசந்திதான் திகைத்துப் போனாள்.

"என்னங்க இது... ராத்திரி பதினொரு மணிக்கு மேலாகப் போவுது. எங்கே சுற்றிட்டு வாறீங்க..." என்றெல்லாம் அவனைக் கன்னாபின்னாவென்று திட்ட வேண்டும் என்று எட்டு மணியிலிருந்து அவளுக்குள் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்ந்திருந்த கோபம் அத்தனையும் அதியமான் தொடுத்த அதிரடித் தாக்குதலில் போன இடம் தெரியாமல் போயிற்று.

"மணி பதினொன்னுக்கு மேலே ஆயிடிச்சே... இன்னமும் காணலையே.. என்னாச்சோ ஏதாச்சோன்னு பயந்துகிட்டிருந்தேன்."

"என்ன பயம்...? ஸ்கூட்டர்ல போனவன் ஏதாவது லாரியிலே அடிபட்டு செத்துப் போயிருப்பானோன்னா...?"

அவள் அதிர்ச்சியுடன் பார்த்தாள். கண்கள் கலங்கிப் போய் விட்டன. மேற்கொண்டு ஏதாவது பேசினால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியாது போலிருந்தது.

உத்தமசோழன்

வாயை இறுக மூடிக் கொண்டு டைனிங் டேபிளுக்குப் போய் எல்லாவற்றையும் எடுத்து வைத்தாள்.

ஹோட்டல் ஆர்த்தியில் அவனும் எலிசபெத்தும் சிரித்து, சிரித்து பேசியபடி வயிறு முட்டத் தின்றது திரும்பவும் நினைவுக்கு வந்து ஒருவித போதையேற்றியது.

அவன் எழுந்த பிறகு அவளால் தனியாகச் சாப்பிட முடியவில்லை. எல்லாவற்றையும் எடுத்து வைத்து விட்டு அவளும் எழுந்து கொண்டாள்.

படுக்கும் போது அவனுக்கும் தனக்குமாக ஏராளமான இடைவெளி விட்டுப் படுத்துக் கொண்டாள்.

திடீரென்று தூக்கம் கலைந்து போனது அதியமானுக்கு. 'என்ன இப்படித் தூங்கி விட்டோம்...?' லேசான அதிர்ச்சியுடன் திரும்பிப் பார்த்தான். படுக்கையின் மறு கோடியில் முகத்தை சுவர் பக்கம் வைத்துக் கொண்டு படுத்திருந்தாள் வசந்தி.

'ப்ச்... தேவையில்லாமல் அவளைத் திட்டி விட்டோமே' என்று உறுத்தல், விடிவிளக்கின் ஒளியில் ஓர் அற்புத ஓவியம் போல் படுத்திருந்த வசந்தியின் வசீகரம் தந்த கிளர்ச்சி... எல்லாம் சேர்ந்து அவனை நெகிழ வைத்திருக்க வேண்டும்.

அவனையும் மீறி அவனது கை, அவள் மேல் மெத்தென்று பதிந்தது.

அவள் சடக்கென்று திரும்பிப் பார்த்தாள்.

"இன்னும் நீ தூங்கலையா வசந்தி..."

"இல்லே... இப்படித் திட்டுனா எப்படித் தூக்கம் வரும்...?"

வசந்தியின் அந்தப் பதில் ஒரு கோபம் கொண்ட குழந்தையைத்தான் ஞாபகப்படுத்தியது. கலங்கிப் போனான்.

திடீரென்று வசந்தி கேட்டாள் :

"யாரு அந்தப் பொண்ணு...?"

எதிர்பாராத தாக்குதலாய் வசந்தியின் கேள்வி. அவன் தடுமாறித்தான் போனான்.

சரி.. இனி மறைத்துப் பயனில்லை. இவளோடு மூர்க்கமாக மோத வேண்டிய அவசியமும் இல்லை. இந்தப் பூஞ்சை மனசுக்கு அதை எதிர்க்கும் தெம்பில்லை. பக்குவமாகச் சொல்லி பிரச்னையை சுலபமாக்கிக் கொள்ள வேண்டியதுதான். சொல்ல வேண்டிய விதத்தில் சொன்னால் நிச்சயம் ஏற்றுக் கொள்வாள்.

மனசு தீர்மானித்துக் கொண்டபின் பதில், சொல்லத் தயாரானான்.

"என்ன கேட்டே வசந்தி...?" கேள்வியில் அதீத நிதானம்... குழைவு.

"இல்லே... ரெண்டு நாளைக்கு முன்னாடி உங்க பின்னால ஸ்கூட்டர்லே உக்காந்திருந்தாளே. அந்தப் பொண்ணு யாருன்னு கேட்டேன்..."

"அதுவா...! எங்கூட வேலை பாக்குற பொண்ணு. எலிசபெத்துன்னு பேரு. ரொம்ப நல்ல பொண்ணு. அதோட மதருக்கு ஏதோ சீரியஸ்னு போன் வந்துச்சு. அதான் அவசரமா அழைச்சுக்கிட்டு போனேன். வேறொண்ணுமில்லே..."

"ச்சேச்சே.. ஏன் என்னமோ சமாதானம் பண்ற மாதிரி சொல்றீங்க. ஒரு ஆத்திரம் அவசரத்துக்கு இது கூட செய்யலேன்னா... அப்புறம் என்னங்க இருக்கு...?"

"அப்பாடா...!" என்றிருந்தது அவனுக்கு.

கொஞ்ச நேரம் அவனையே குறுகுறுவென்று பார்த்திருந்து விட்டு, அவனது மீசையைக் குறும்பு செய்தபடி படுத்திருந்த வசந்தி மறுபடியும் கேட்டாள்.

"போன வாரம் ஜுபிடர் தியேட்டர் வாசல்லே, உங்க பின்னாடி நின்னுக்கிட்டிருந்துச்சே... அதே பெண்தானே...!"

என்ன இது...

முடிந்தது என்று நினைத்த போது இதென்ன முன்னிலும் அதிர்ச்சியாய்.. வேறொரு புதுக் கேள்வி...? பதிலைத் தயார் செய்து கொள்ள நிறைய அவகாசம் தேவைப்பட்டது. பதில் தயாரானால் மட்டும் போதுமா... அதை இயல்பாகவும் சொல்ல வேண்டுமே.. உள்ளுக்குள் எண்ணற்ற





## கிராமத்துப் பறவைகளே...!

ஜனவரி 8, கல்கி பொங்கல் இதழ், கிராமச் சிறப்பிதழாக மலர்கிறது.

வாசகர்கள் தம் கிராம வாழ்க்கைச் சம்பவங்களை நினைவுகூர்ந்து போஸ்ட் கார்டில் மலர விடத் தயாரா?

உங்கள் கிராமத்துப் பெருமைகளை, அருமைகளை, அதிசயங்களை, வித்தியாசமான மனிதர்களை, பழக்கவழக்கங்களை, 'வாவ்' என விழி உயர்த்தும்படி எழுதி அனுப்புங்கள் பார்க்கலாம்! தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசுகள் காத்திருக்கின்றன!

**கடிதங்கள் வந்து சேரக் கடைசித் தேதி - டிசம்பர் 15.**

**— ஆசிரியர்**

---

ஒத்திகைகள் செய்து கொண்டான்.

"ஓ.. ஜுபிடரிலா... ஆமாமா... அதே பொண்ணுதான்.. அவ ரொம்ப ரசனையுள்ள பொண்ணுன்னு வச்சுக்கோயேன். பூராவு மகேந்திராவோட 'மறுபடியும்.' பாத்தே ஆகணும்னு பிடிவாதம் பிடிச்சா. நல்ல ரசனையுள்ள கம்பேனியன் இல்லாம, அவளால எந்த நல்ல படத்தையும் முழுசா ரசிக்க முடியாதாம். அப்படியும் 'எனக்கு வேலை இருக்கு.. வீட்லே வசந்தி காத்துக்கிட்டிருப்பாள்'னெல்லாம் சொல்லிப் பாத்தேன். கேக்கலே. வேறு வழியில்லாம போக வேண்டியதாப் போயிடிச்சு. மத்தபடி அந்தப் பொண்ணு ரொம்ப நல்ல பொண்ணு..."

அவள், அவனை ஒரு மாதிரியாகப் பார்த்தாள். சிரித்தாள்.

"நான் மட்டும் என்ன தப்பான பொண்ணுன்னா சொன்னேன்...? அதிருக்கட்டும். படம் எப்படியிருந்துச்சு. அந்தக் 'கவிதா சுப்ரமணியம்' கேரக்டர் எப்படி...? அவளுக்குப் பிடிச்சிருந்துச்சாமா...?"

ரொம்ப சாதாரணமாகக் கேட்பதைப் போலத்தான் கேட்டாள். ஆனால் ஒவ்வொரு வார்த்தையும் ஊசியாய் மாறிக் குத்தின. அவன் சுத்தமாய் நிலைகுலைந்து போனான்.

'பேசுவது நம்ப வசந்திதானா..! அவளால் இப்படியெல்லாம் சூட்சுமமாய்க் கூடப் பேச முடியுமா...'

அவன் தொடர்ந்தான்.

"ஓங்கிட்ட சொல்றதுக்கென்ன வசந்தி... அந்த எலிசபெத் இருக்காளே, அவ ரொம்ப புத்திசாலி. நிறைய லிட்டரரி டேஸ்ட் உள்ளவ. ரசனையும் கலகலப்பும் நிறைஞ்ச இண்ட்ரெஸ்டிங்கான பெண். சுருக்கமா சொன்னா, ஒரு நல்ல கம்பேனியன். அதனாலதான் அவளை அவாய்ட் பண்ண முடியலே. அதோட அவளுக்கு கம்பெனி கொடுக்கிறதிலே எந்தத் தப்புமில்லேன்னும் தோணுது. இன்னும் சொல்லப் போனா, உன்னைப் போல ஒரு புத்திசாலியால்... நான் சொல்றதை சரியாகப் புரிஞ்சுக்க முடியும்னு நினைக்கிறேன்..."

"சர்ட்டன்லி...!" வசந்தியின் பதிலில் ஏராள நிதானம்.

தான் சொல்ல நினைத்ததை சரியாகச் சொல்லி, பெற நினைத்த பதிலைப் பெற்று விட்ட திருப்தி அவனுக்கு.

வழக்கம் போல் தாமதமாக வீடு திரும்பிய அதியமானுக்கு வசந்தியின் கையிலிருந்த புத்தகத்தைப் பார்த்ததும் சொல்ல முடியாத ஆச்சரியம்.

எமிலிஸோலா எழுதிய 'தெரஸா' என்ற பிரெஞ்சு நாவல்.

"ஏது வசந்தி இது...?"

ஒரு வினாடி யோசிப்புக்குப் பின், "ஏன்?" என்று பார்வையைக் கூர்மையாக்கினாள்.

"அதுக்கில்லே... எமிலிஸோலா ஒரு மாதிரியான எழுத்தாளர்னு சொல்வாங்க...?"

"எது மாதிரி சொல்வாங்களோ எனக்குத் தெரியாது. ஆனா இதைப் படிக்க முடிச்சு ஒரு மணி நேரமாச்சு. இன்னமும் நான் முழுசா சுயநிலைக்கு வரலே. வர முடியலே. அப்படி ஒரு பாதிப்பை ஏற்படுத்திடிச்சு. இதை யாராவது மனசு ஒன்றி ஒரு தடவை படிச்சுட்டா போதும். அப்புறம் அடுத்தவங்க புருசனையோ, பொண்டாட்டியையோ இருட்டுத்தனமா பாக்கவே மாட்டாங்க."

அவன் முகம் முழுக்க ஆச்சரியம்.

"அப்படியா... உனக்கு எப்படிக் கிடைச்சது இது...?"

"அதுவா... நம்ப..." நாக்கு நுனி வரை வந்து விட்ட பதிலை சட்டென்று மாற்றிக் கொண்டாள்.

"எங்க ஆபீஸ்லே ஒருத்தர் இருக்காரு. சமீபத்திலே ஒரு டெபுடேஷன்லே வந்திருக்

காரு. சித்தார்த்தன்னு பேரு. நீங்க அடிக்கடி சொல்வீங்களே. எலிஸபெத், எலிஸபெத் துன்னு... அது மாதிரி ஒரு இண்டரஸ்டிங் பர்ஸன். அதென்னமோ எங்க ஆபீஸ்லே இருக்கிற அத்தனை பேரையும் விட்டுட்டு எம்மேலதான் அவருக்கு உசிரு. இத்தனைக் கும் நான் யாரோடேயும் அதிகம் ஒட்டிக் காத ஜாதின்னு உங்களுக்கே தெரியும். அவ ருக்கு அப்படி ஒதுங்கி ஒதுங்கி சாதுவா இருக்கிறதுதான் ரொம்பப் புடிச்சிருக்காம். உங்களை மாதிரி ஒரு அற்புதமான பெண் ணைத்தான் நான் இதுவரைக்கும் தேடிக்கிட் டிருந்தேன். அப்படி... இப்படின்னு புகழ்ந்து தள்ளுவார். எனக்கே கூச்சமா இருக்கும்...!''

''அட...!''

இந்த 'அட....!'வை மிகவும் யதார்த்தமாக சொல்லத்தான் நினைத்தான். ஆனாலும் பிசிறு தட்டத்தான் செய்தது.

''ஹூம்... அப்புறம்...?''

''அப்புறமென்ன? இப்போதெல்லாம் அவர் மனசைப் பாதித்த எதையுமே என் னிடம் வந்து சொல்லாமல் விட மாட்டார். லஞ்ச் டயம்லே கூட எங்கூடத்தான் சாப்பிடு றார். நேரம் கிடைக்கிறப்பவெல்லாம் எங் கிட்ட வந்து உக்காந்துகிட்டு எதையாவது சொல்லிக்கிட்டேயிருப்பார். உங்களுக்கு அந்த எலிசபெத் மாதிரி எனக்கு இந்த சித்தார்த்தன்...''

இப்படிச் சொன்னவளின் முகத்தையே உன்னிப்பாய்ப் பார்த்தவாறிருந்த அதிய மானுக்குள் கொஞ்சம் ஏமாற்றம். வருத்தம். இப்படிச் சொன்னவளின் முகத்தில் இம் மியளவு கூட உறுத்தலே தென்படவில்லை. ரொம்ப உற்சாகமாகவே விவரித்தாள்.

அன்று இரவு எப்போதும் போல் வசந்தி யுடன் சகஜமாகப் பேசத்தான் நினைத்தான். ஆனால் முடியவில்லை.

**ம**றுநாள் இரவு வீடு திரும்பிய அதிய மான் கொஞ்சம் சோர்வாக முன் ஹாலில் கிடந்த சோபாவில் சரிந்தான். சரிந்த மறு வினாடியே திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

''வசந்தி...!'' குரலில் லேசான பதட்டம்.

''என்னங்க...?''

''யாரு வந்திருந்தா.. சிகரெட் துண்டு கிடக்கு...?''

சற்று தாமதமாய்ச் சொன்னாள்.

''ஓ... அதுவா.. அந்த சித்தார்த்தன்தான் வந்திருந்தாரு.. 'நீங்க வருவீங்க... உங்களையும் பாக்கணும்னு ரொம்ப நேரம் உக்காந்து பேசிக்கிட்டிருந்தாரு. நீங்க வர்ற வழியா யில்லே. அப்புறம் நான்தான் 'அவரு இப்ப வர மாட்டாரு. நீங்க போங்கன்னு' அனுப்பி வச்சேன். அபூர்வமாத்தான் சிகரெட் பிடிப் பாராம். தவறுதலா இங்கேயே போட்டுட் டாரு போலிருக்கு...''

துடைப்பத்தை எடுத்து வந்து அந்த சிகரெட் துண்டை எடுத்து வெளியே எறிந் தாள்.

அதியமானிடமிருந்து ஒரு வார்த்தை கூட பதில் இல்லை. அவனது அசாத்தியமான அமைதியை நினைத்து அவளின் சின்ன இதழ்கள் விரிந்து கொண்டன.

**'கி**ரீச்...' சப்தம் கேட்டு வாசல் பக்கம் பார்த்தாள். அதியமான் உள்ளே நுழைந்து கொண்டிருந்தான்.

''என்னங்க இது... இன்னிக்கு அந்த எலிச பெத்தோட பர்த்டே... வேளாங்கண்ணி வரைக்கும் துணையா போயிட்டு வரணும்னு ஒரு வாரத்துக்கு முன்னாடியே சொன்னீங்க... வர பத்து மணிக்கும் மேலாகும்னு நினைச் சேன். ஆறரை மணிக்கே வந்து நிக்குறீங்க...!''

''போகலே...''

''ஏன்...?''

''இதென்ன கேள்வி... போகலைன்னா... போகலைதான்...!''

அந்த ஆத்திரம் அவளுக்குப் பிடித்திருந் தது.

இந்த ஆத்திரத்திற்காகத்தானே இத்தனை நாளும் கற்பனையாய் ஒரு சித்தார்த்தனை உருவாக்கி, நேற்று மாலை திடீரென்று வந்து விட்டு நிற்க நேரமில்லாமல் புறப்பட்டுப் போன தன் சித்தி மகனையும் அவன் எறிந்து விட்டுப் போன சிகரெட் துண்டையும், அந்த சித்தார்த்தனின் அம்சங்களாக்கி அதியமானி டம் விதவிதமாய்ச் சொல்லிச் சொல்லி மாய்ந்து கொண்டிருந்தாள்!

''எதுக்கு அந்த எம்.எல்.ஏ. தமிழ் நாடு முழுக்க சூறாவளி சுற்றுப் பயணம் செய்யறார்?''

''அவரோட தொகுதியை கண்டு பிடிக்கவாம்!''

- கொங்கணாபுரம் வே. செந்தில்



# வேதபுரத்து வியாபாரிகள் 23

**'சொல்லுடையராதல் வேறு;
செயலுடையராதல் வேறு'....
('அருங்குறள்' -வேதபுரத்து நீதி நூல். ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அதிகாரம் : 75. செய்யுள் - 9)**

புதிய அமைச்சரவை அன்றே அறிவிக்கப்பட்டு, அடுத்த நாள் காலை பதவிப் பிரமாணம் நடந்தேறி விட்டது.

இரண்டு மந்திரிகளைத் தவிர, மற்றவர்கள் தலைவர் மீது சத்தியம் செய்தார்கள்.

கலியனும் தம்புசாமியும் துணைத் தலைவர் மீது ஆணையிட்டுப் பதவி ஏற்றார்கள்.

துணைத் தலைவர் மீது அவர்கள் சத்தியமிட்ட போது, தலைமை நீதிபதி - அவர்தான் பதவிப் பிரமாணம் செய்து வைத்த புரோகிதர் - நஞ்சுண்டனைப் பார்த்தார். அவர்கள் செய்வது 'சரியா' என்ற கேள்வி அவர் பார்வையில் தெரிந்தது.

நஞ்சுண்டன் மௌனமாக இருந்தான்.

"இது சட்டப்படி செல்லாது" என்றான் அபூர்வா.

"நீங்கதான் என் தெய்வம். நாங்க எதை நம்பறமோ அது மீதுதான் எங்களால் சத்தியம் செய்ய முடியும்" என்றார் தம்புசாமி அபூர்வாவிடம்.

மற்றைய மந்திரிகள், "தாங்கள் செய்தது சரியா?" என்று யோசித்துச் சங்கடத்திலாழ்ந்துள்ளனர் என்பது அவர்கள் சற்று நெளிவதினின்றும் புலனாயிற்று.

"நாங்களும் உங்க பேரிலே சத்தியம் செய்து பதவி ஏற்கிறோம்" என்றார் ஒரு மூத்த மந்திரி.

நஞ்சுண்டன் சொன்னான்: "ரெண்டு தடவை பதவிப் பிரமாணம் நடக்கிறதுதான் சட்ட விரோதம். ஆனது ஆயாச்சு, அவங்க அவங்க நம்பறதின் பேரிலே சத்தியம் செய்யறது தப்பில்லே."

"எங்களுக்கும் மேடம் பேரிலே தான் நம்பிக்கை... எங்களுக்கும்..."

"இருங்க... தலைவரோட தொடர்பு கொண்டு அவர் முடிவை வந்து சொல்றேன்" என்று சொல்லிக் கொண்டே எழுந்து போனான் நஞ்சுண்டன்.

சிறிது நேரம் கழித்து அவன் வந்தான்.

"தலைவருக்கு ஆட்சேபணையில்லே. துணைத் தலைவர் பேரிலும் சத்தியப் பிரமாணம் எடுத்துக்கலாம்" என்றான் அவன்.

"அப்பொ நாங்க" என்றார் அந்த மூத்த அமைச்சர் மீண்டும்.

"பதவிப் பிரமாணம் முடிந்து விட்டது" என்று அறிவித்தான் அபூர்வா.

பிறகு தொடங்கியது, அமைச்சர்களுடைய அபூர்வாவின் பாதம் நோக்கிய பயணம்.

"கலாசார அதிர்ச்சி வேணாம், பேசாம இருங்க" என்று கீழ்க்குரலில் சொன்னான், அபூர்வாவிடம் நஞ்சுண்டன்....

அலுவலகத்தில் உட்கார்ந்திருந்த அபூர்வாவின் மனத்திரையில், இந்தப் பதவிப் பிரமாணக் காட்சி நிழலாடியது. அவன் இந் நிகழ்ச்சி முடிந்ததும், அலுவலகத்துக்கு வந்து விட்டான்.

இன்று மாலை இந்திரப்பிரஸ்தம் போவதில்லை என்று அவன் தீர்மானித்து விட்டான். ஆனால் தன் முடிவை அவன் இந்திரபிரஸ்தத்துத் தலைவர் அலுவலகத்துக்குச் சொல்லவில்லை.

அவன் வர வேண்டும் என்று அவர்கள் கட்டளையிட்டது அவனுக்குப் பிடிக்கவில்லை. "தலைவருக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லை" என்றார்கள். அது எப்படிச் சாத்தியம்? தலைவருடைய ஒப்புதல் இல்லாமல் அவனால் இந்திரபிரஸ்தம் போக முடியுமா?

அந்த டெலிஃபோன் செய்தி வந்த போது, நஞ்சுண்டன் அவன் அறையிலிருந்தான். நகத்தைப் பரிசோதனை செய்து கொண்டிருந்தான். அவன் அந்தச் செய்தி வந்த போது, ஓரளவு திடுக்கிட்டான்

என்பதை அவள் முகபாவம் காட்டிக் கொடுத்திருக்கக் கூடும். ஆனால் நஞ்சுகன்டன் அவளை ஒன்றும் கேட்கவில்லை. அப்படியானால், அச்செய்தி வருமென்று அவனுக்கு முன்னமே தெரிந்திருக்குமோ? அவள் இந்திரபிரஸ்தம் போக வேண்டுமென்று அவன் நினைக்கின்றானா? ஆனால் அதைப் பற்றி அவன் ஒன்றும் பேசவேயில்லை. ஏன்? கூர்மையான அறிவும், செயல் திறனுமுடைய அவனால், அவள் திடுக்கிட்ட நிலையிலிருந்தாள் என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை என்பதை, அவளால் நம்ப முடியவில்லை. தொடர்ந்து அவள், நகத்தைப் பரிசோதனை செய்து கொண்டிருந்தது அவள் நினைவுக்கு வந்தது. இது ஒரு செயற்கையான செயல்.

திடீரென்று அவள் சிந்தனையில், இதுதான் காரணமென்று அறிவிக்கும் எண்ணத்தின் மின்னல். அவளுக்குப் புரிந்தது.

அவள் தன் செயலரைக் கூப்பிட்டு, நஞ்சுகண்டனை அவள் அறைக்கு உடனே வரும்படி சொல்லச் சொன்னாள்.



நஞ்சுகண்டன் வந்தான்.

"உட்காருங்க... நான் எல்லா மூத்த அரசாங்க அதிகாரிகளையும் பாத்தாகணுமே!" என்றாள் அபூர்வா.

"நீங்க இதெல்லாம் செய்ய ஆரம்பிச்சா, எனக்கு வேலை போயிடும்" என்றான் நஞ்சுகண்டன் சிரித்துக் கொண்டே.

"புரியலே."

"நீங்க என்ன செய்யணும் சொல்லுங்க, நான்தான் எல்லாத்தையும் ஒருங்கிணைக்கும் தொடர்பாளர். அவர்களை நீங்க பாக்கணுங்கிற அவசியமேயில்லே..."

"இதெ தீர்மானிக்கிறது யாரு?"

நஞ்சுகண்டன் சிறிது திடுக்கிட்ட நிலையில் அவளைப் பார்த்தான். சமாளித்துக் கொண்டு, புன்னகை செய்தான்.

"வேதபுரத்து மரபு. தலைவரோ, துணைத் தலைவரோ தம்மை மலினப்படுத்திக் கொள்ளக் கூடாது. தலைவர் இப்பொ இருக்கிற மரபு மாறணுங்கிறதை விரும்ப மாட்டார்னுதான் நினைக்கிறேன். அவர்கிட்டே போய் நான் அபிப்பிராயம் கேட்டு, நீங்க புதுசா சொல்ற அமைப்பை அவர் ஏத்துக் கொள்ளலேன்னா, உங்களுக்கும்தான் ஏமாற்றம்... இதைத் தவிர்க்கலாமில்லையா?"

"எனக்குப் பரிபூரண அதிகாரமிருக்கிறதா நீங்க சொன்னதா ஞாபகம்."

"அரசாங்கக் கொள்கைகளை அறிவிக்கிறதைப் பொறுத்தவரையில் நிச்சியமா உண்டு. ஆனால் நிர்வாகங்கிறது வேற

இந்திரா பார்த்தசாரதி

விஷயம்."

"நிர்வாகத்தைப் பொறுத்தவரையில் பரிபூரண அதிகாரம் உங்ககிட்டே... அப்படித்தானே" என்றான் அபூர்வா.

"நோ... என்கிட்டேயில்லே. தலைவர் கிட்டே."

"தலைவர் நான் இந்திரபிரஸ்தம் போறதைப் பத்தி என்ன சொல்றாரு?"

"புரியலே."

"உங்களுக்குப் புரியுது. ஆனா புரியாத மாதிரி நடிக்கறீங்க... இந்திரபிரஸ்தத்துத் தலைவர் என்னை இன்னிக்கு இந்திரபிரஸ்தத்துக்கு வரச் சொன்னாருங்கிறது உங்களுக்குத் தெரியும்."

"அப்படியா? எனக்குத் தெரியாதே."

"எனக்கு நேத்து ஃபோன் வந்த போது, நீங்க என் 'ரூம்'லேருந்தீங்க. நான் ஃபோன்லே வந்த செய்தி கேட்டு ஓரளவு திடுக்கிட்டேன். அதுவும் உங்களுக்குத் தெரியும். என்னன்னு கேக்கணுங்கிற ஓர் இயல்பான ஆவல் கூட உங்களுக்கில்லே... ஏன்...? ஏன்னா விஷயம் உங்களுக்குத் தெரியும்."

நஞ்சுகண்டன் புன்னகையுடன் கேட்டான்: "நீங்க போகலியா?"

"தலைவருக்குத் தெரிய வேண்டாம்னாங்க. அது எப்படி சாத்தியம்? நீங்க என்ன சொல்றீங்க?"

நஞ்சுகண்டன் பேசாமலிருந்தான்.

"இனிமே போகவும் முடியாது. 'ஃப்ளைட்' இல்லே."

"ஏன் 'சார்டர்ட் ஃப்ளைட்' ஏற்பாடு செய்துக்கலாம், தேவையாயிருந்தா..."

அபூர்வா புன்னகை செய்தாள்.

"எதுக்குச் சிரிக்கறீங்க?" என்று கேட்டான் நஞ்சுகண்டன்.

"வேதபுரத்துக்கு வந்தப்புறம், நானும் கொஞ்சம் அரசியல் கத்துக்கிட்டிருக்கேன், மிஸ்டர் நஞ்சுகண்டன். நான் அவ்வளவு முட்டாளில்லே."

"ஏன் அப்படிச் சொல்றீங்க?"

"சொல்லட்டுமா? ஒண்ணு, இந்திரபிரஸ்தத்துத் தலைவர் அலுவலகத்திலே என்னோட தொடர்பு கொள்ளணும்னா -அதுவும் நம் தலைவருக்குத் தெரியாமெ தொடர்பு கொள்ளணும்னா - அது சாத்தியமில்லேங்கிறது வேற விஷயம் - என்னை அலுவலகத்திலே வச்சு கூப்பிட்டிருக்க மாட்டாங்க. ரெண்டு, தலைவருக்குச் சொல்லணும்னு அவசியமில்லேன்னு சொல்றப்பவே, அது சாத்தியமில்லேன்னு அவங்களுக்கு நிச்சியமா தெரிஞ்சிருக்கணும்... மூணு, அந்தக் கால் வேதபுரத்திலேந்து வந்திருக்குதுன்னு நான் 'ட்ரேஸ்' செய்தாச்சு... என்னை ஆழம் பாக்கறீங்களா, நஞ்சுகண்டன்? நான் இந்திரபிரஸ்தம் புறப்பட்டுப் போறேனா இல்லையான்னு...?" என்று கோபப்படாமல் நிதானமாகப் புன்னகையுடன் கூறினாள் அபூர்வா.

'மூன்று' என்று அவன் சொன்ன போது கதை அப்படித்தான் நடந்திருக்க வேண்டுமென்ற யூகத்தில் அடித்துப் பேசினாள். அவள் அந்த 'கால்' எங்கிருந்து வந்தது என்றறிய முயற்சி செய்யவில்லை.

"இந்திரபிரஸ்தத்திலிருந்து அந்த 'கால்' வந்திருந்தா போயிருப்பீங்களா?" என்று கேட்டான் நஞ்சுகண்டன்.

"நான் அத்தைக்கு மீசை முளைச்சிருந்தாங்கிற மாதிரி கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லறதில்லே. இது யாருடைய யோஜனை? என்னைப் பரிசோதித்துப் பாக்கறது, இந்திரபிரஸ்தத்திலே என்னை விலை கொடுத்து வாங்கிட்டாங்களா வாங்க முடியுமாங்கிற மாதிரி பரிசோதனை... மிஸ்டர் நஞ்சுகண்டன் நான் தலைவரைப் பாத்தாகணும்..."

"பாக்கலாம் கொஞ்சம் பொறுங்க... இந்த எல்லா அநுபவங்களும் உங்க புஸ்தகத்திலே வரணும்..." என்று சிரித்துக் கொண்டே சொன்னான் நஞ்சுகண்டன்.

"சரி... இன்னும் ஒரு வாரத்துக்குள்ளே, நாட்டிலேருக்கிற சிலைகள், படங்கள், யாருக்கிருந்தாலும் சரி, அப்புறப்படுத்தியா



''இந்த சேலை ரொம்ப டார்க்கா இருக்கு. இதைவிட கொஞ்சம் லைட் கலரா பாருங்களேன்..''

''கவலைப்படாதீங்கம்மா! ஒரு தடவ தண்ணியில போட்டீங்கன்னா கொஞ்சம் லைட்டாயிடும்!''

— ஆர்.பி. செல்வம்

கணும். இந்த உண்டியல் பழக்கத்தை நிறுத்தியாகணும்... நீங்கதான் நிர்வாகத்தோட ஒருங்கிணைப்பாளர்னு சொன்னீங்க... தலைவரை வச்சோ என்னை வச்சோ யாரானும் பணம் சம்பாதிக்க முயன்றால் அதுக்குக் கடுந்தண்டனை... புரிஞ்சுதா? உடனே நடவடிக்கை எடுங்க.''

நஞ்சுண்டன் புன்னகையுடன் எழுந்தான்.

''நிச்சியமா செய்யறேன்'' என்றான் அவன்.

அபூர்வா அன்று மாலை அலுவலகத்திலிருந்து வீட்டுக்குச் செல்லும் போது திடுக்கிட்டாள்.

தெருக்களிலெல்லாம் மூலைக்கு மூலை அவள் படங்கள். விசுவரூப தரிசனம். எவ்வளவு சீக்கிரத்தில் முளைத்து விட்டன!

வனிதாவை அவள் அலுவலகத்துக்கு வரக் கூடாதென்று சொல்லி விட்டாள். வனிதா, அவள் வீட்டுக்குப் போன போது, யாருடனோ டெலிஃபோனில் பேசிக் கொண்டிருந்தாள்.

''வனிதா... வாட் நான்சென்ஸ்!... தெருவெல்லாம் பாத்தியா?''

வனிதா புன்னகை செய்து கொண்டே 'பார்த்தேன்' என்பதற்கு அடையாளமாகத் தலையை லேசாக அசைத்து விட்டு, டெலிஃபோனில் சொன்னாள். ''சரி.. சொல்றேன்.''

''யாரு டெலிஃபோன், என்ன சொல்றே?'' என்று கேட்டாள் அபூர்வா.

''இந்த மரபை உங்களாலே மாத்த முடியாது. நீங்க கண்ணிலே படாட்டி, யாரும் உங்களை மதிக்க மாட்டாங்க. இதுதான் எங்க - மன்னிக்கவும் - நம்ம கலாசார மரபு... கண்ணிலே பட்டுக்கிட்டேருக்கணும் சிலையா, படமா, பேப்பர்லே செய்தியா...'' என்றாள் வனிதா.

''நான் நஞ்சுண்டன்கிட்டே சொல்லியாச்சு, இன்னும் ஒரு வாரத்திலே எல்லா சிலையையும் படங்களையும் தெரு மூலையிலேந்து அப்புறப்படுத்தியாகணும்னு....''

''தலைவர்...?''

''யாராயிருந்தாலும் சரி.''

''இது உங்களுக்கு நல்லதுக்கில்லே.''

''பாப்போம். சரி, யார்கிட்டே ஃபோன் பேசிக்கிட்டிருந்தே...? பேரமில்லையே?''

''இதையெல்லாம் 'பேரம்'னு சொல்லறதே தப்பு... சந்தோஷத்தைப் பகிர்ந்து கொள்ளறதை 'பேரம்'னா சொல்லுவாங்க?''

''இதோ பாரு... நான் வேதபுரத்துக் கலாசாரத்தையே மாத்தி அமைக்கலாம்னுருக்கேன். நீயே என் வீட்டிலேருந்துகிட்டு...''

வனிதா இடைமறித்தாள் : ''பதவியிலிருக்கிறவங்க ஜனங்களோட கலாசாரத்திலே குறுக்கிடாமெ, பிரியத்திலே ஜனங்க என்னென்ன செய்யறாங்களோ அதெல்லாம் ஏத்துகிட்டு, அவங்க பெற்ற இன்பம் யாஹும் பெறுகன்னு இருக்கிறதுதான் புத்திசாலித்தனம். நீங்க 'அது தப்பு, இது தப்பு'ன்னு, மக்களோட பழக்க வழக்கங்கள்லே புகுந்து விளையாடினீங்க, தலைவர் பதவியைத் தக்க வச்சிக்கிறது ரொம்ப கஷ்டம்... நான் பொறந்ததிலேர்ந்து வேதபுரத்துவாசி... எனக்குத் தெரியும் என் ஜனங்களைப் பற்றி. நான் அவங்க கொடுக்கிறதை வாங்கிக்காட்டா, அவங்களோட, 'கொடுத்துப் பெறுகிற' சந்தோஷத்தைக் கெடுக்கிறதா அர்த்தம். நீங்க சொல்ல வேண்டியதெல்லாம், பொதுக் கூட்டத்திலும், ரேடியோவிலும், டி.வி.யிலும் வச்சுக்கங்க... ஆனா நடைமுறைங்கிறது வேறன்னு நீங்க புரிஞ்சுகிட்டா போதும்.''

அபூர்வா அவளை உற்றுப் பார்த்தாள். அன்று கணவனுக்குப் பயந்து தன் வீட்டில் அடைக்கலம் கோரி வந்த பெண்மணியா இவள்! அரசியலில் கட்டுத்தறிகள் தாம், கட்டுத்தறி சொந்தக்காரர்களை விட கெட்டிக்காரர்கள் ஆகி விடுகிறார்கள்!

வனிதா கூறுவது போல், உயர்ந்த கோட்பாடுகள் யாவும் சொல் வழக்குக்கு மட்டுந்தானா? இதுதான் இன்றைய வேதபுரத்துக் கலாசாரம் என்றால் அவளால் இதை மாற்றி விட முடியுமா?

ஏற்படுகின்ற அனுபவங்களைப் புத்தகமாக எழுதுவதைத் தவிர, அவளால் வேறு ஒன்றும் செய்ய இயலாதா?

நஞ்சுண்டன் கூறினான் இரண்டு நாட்களுக்கு முன்பு : ''போதும்! எனக்கு இதெல்லாம் மனப்பாடம். தலைவர் பதவிக்கு வந்தவுடனே இப்படித்தான் அடிக்கடி சொல்லிக்கிட்டிருந்தாரு..''

பதவிக்கு வந்தவுடன் சொல்லிக் கொண்டிருந்தவர், அமைப்புடன் இணைந்து ஆதாயம் தேடத் தொடங்கியதுதான், தலைவர் பதவியைத் தக்கவைத்துக் கொள்வதற்கான ஆரம்பப் பாடமா?

அபூர்வாவுக்கு அன்றிரவு வெகுநேரம் வரை உறக்கம் வரவேயில்லை.

(தொடரும்)



**பாடசாலை வித்யார்த்திகளில் ஒரு பகுதி**

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 130 மாணாக்கர்கள் வேதாத்யாயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஓர் நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ. 500/-, ரூ. 750/- அல்லது 1000/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 5000/-, ரூ. 7500 அல்லது 10,000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்குகொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும் :

**அத்வைத வித்யசார்யா மஹாராஜா ஸாஹேப்**
**ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**42, காமாக்ஷி ஜோசியர் தெரு, கும்பகோணம் - 612 001.**

**செக் (or) டிராப்ட் முதலியவைகளை A.V.M.S.G.D.P.S ஸமிதி என்ற பெயருக்கு அனுப்பலாம்.**

******இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு******

## வேத வைதிக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

I

1. ரிக்வேத சருங்கலா - நாகராக்ஷரம் - ரூ. 75/-
2. ஸாமவேத ஸம்ஹிதா - கிரந்தாக்ஷரம் - 2 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 235/-, இரண்டாம் பாகம் - ரூ. 200/-)
3. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் - நாகராக்ஷரம் - 3 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 200/-, இரண்டாம் பாகம் - ரூ. 135/-, மூன்றாம் பாகம் - ரூ. 110/-)
4. ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம் - கிரந்தாக்ஷரம் - ரூ. 100/-
5. சாந்தி குஸுமாகரம் (2 பாகங்கள்) - ரூ. 220/-

II **கிரந்தாக்ஷரத்தில் காரிகையுடன் பிரம்மஸ்ரீ முத்துச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள்**

1. போதாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 115/-
2. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 110/-
3. ஆபஸ்தம்ப சிராத்த ப்ரயோகம் - ரூ. 65/-
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 105/-
5. ஆச்வலாயன சிராத்த ப்ரயோகம் - ரூ. 60/-
6. கல்ப சிந்தாமணி - ரூ. 65/-

III **நாகராக்ஷரம்**

1. மனாசேச்லோக - ராமமந்த்ராசே ச்லோக - ரூ. 35/- (மராத்தி மூலம் — தமிழ் பதவுரை)
2. ஸ்ரீ ராதாகிருஷ்ண பூஜாவிதானம் - ரூ. 35/- (ஸம்ஸ்கிருத மூலம் - தமிழ் பதவுரை)
3. நவோதந்தம் - நைஷதகாவ்யத்தின் சுருக்கம் - ரூ. 35/- (ஸம்ஸ்கிருத மூலம் - ஆங்கில பதவுரை)
4. வேதபாட வழிமுறை (syllabus) ரிக், யஜுர், ஸாம - ரூ. 35/-
5. ராமோதந்தம் - நாகராக்ஷரம் - ரூ. 35/-
6. ஸௌபாக்ய யந்த்ரம் - ஆர்ட் பேப்பரில் - ரூ. 25/-

V.P.P. யில் அனுப்புவதில்லை. முழுத் தொகையையும் **M.O. (or) Draft** மூலம் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம். "எமது நூல்கள் பற்றிய விவரமான கேட்லாக் வாங்க விரும்புவோர் ரூ. 3/- தபால்தலை அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்."

**பிரஸிடென்ட் - டிரஷரர் - A.V.M.S.G.D.P.S சமிதி, "ஸ்ரீ கோவிந்த பவனம்",**
**42, காமாக்ஷி ஜோசியர் தெரு, கும்பகோணம் - 612 001.**

நேரில் வாங்க விரும்புவோர் கண்டிப்பாக - ராஜா வேதகாவ்ய பாடசாலை, யாகசாலை தெரு. (சக்கரை படித்துறை அருகில்) கும்பகோணம் - 612 001 என்ற விலாசத்தில் பெற்றுக் கொள்ளவும்.

# பார்த்திபன் கனவு

## 11.
## ரணகளம்

புரட்டாசி மாதத்துப் பௌர்ணமி இரவில் வெண்ணாற்றங்கரை மிகவும் கோரமான காட்சியை அளித்தது. வானத்தில் வெண்ணிலவைப் பொழிந்தவண்ணம் பவனி வந்து கொண்டிருந்த பூரணச் சந்திரனும், அந்தக் கொடுங் காட்சியைக் காணச் சகியாதவன் போல், அடிக்கடி வெள்ளி மேகத் திரையிட்டுத் தன்னை மறைத்துக் கொண்டான்.

பகலெல்லாம் அந்த நதிக்கரையில் நடந்த பயங்கரமான யுத்தத்தில் மடிந்தவர்களின் இரத்தம் வெள்ளத்துடன் கலந்த படியால், ஆற்றில் அன்றிரவு இரத்த வெள்ளம் ஓடுவதாகவே தோன்றியது. அந்த வெள்ளத்தில் பிரதிபலித்த பூரணச் சந்திரனின் பிம்பமும் செக்கச் செவேலென்ற இரத்த நிறமடைந்து காணப்பட்டது.

நதியின் மேற்குக் கரையில் கண்ணுக்கெட்டிய தூரம், கொடும்போர் நடந்த ரணகளத்தின் கோரமான காட்சிதான். வீரசொர்க்கம் அடைந்த ஆயிரக்கணக்கான போர் வீரர்களின் உடல்கள் அந்த ரணகளமெங்கும் சிதறிக் கிடந்தன. சில இடங்களில் அவை கும்பல் கும்பலாகக் கிடந்தன; கால் வேறு, கை வேறாகச் சிதைவுண்டு கிடந்த உடல்கள் எத்தனையோ! மனிதர்களைப் போலவே போரில் மடிந்த குதிரைகளும் ஆங்காங்கே காணப்பட்டன. வெகு தூரத்தில் குன்றுகளைப் போல் சில கறுத்த உருவங்கள் விழுந்து கிடந்தன. அவை போர் யானைகளாகத்தான் இருக்க வேண்டும்.

அந்த ரணகளத்தில் விருந்துண்ண ஆசைகொண்ட நூற்றுக்கணக்கான கழுகுகளும், பருந்துகளும் நாலா பக்கங்களிலிருந்தும் பறந்து வந்து வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவற்றின் விரித்த சிறகுகளின் நிழல் பெரிதாகவும் சிறிதாகவும் ரணகளத்தின் மேல் ஆங்காங்கு விழுந்து, அதன் பயங்கரத்தை மிகுதிப்படுத்திக் கொண்டிருந்தன.

நதியின் இனிய 'மர்மர' சப்தத்தைப் பருந்துகள், கழுகுகளின் கர்ண கடூரமான குரல்கள் அடிக்கடி குலைத்துக் கொண்டிருந்தன.

அந்தக் கோரமான ரணகளத்தில், மெல்லிய மேகத் திரைகளினாலும் வட்டமிட்ட பருந்துகளின் நிழலினாலும் மங்கிய நிலவொளியில், ஒரு மனித உருவம் மெல்ல மெல்ல நடந்து போய்க் கொண்டிருந்தது. அது சுற்றுமுற்றும் உற்றுப் பார்த்துக் கொண்டே போயிற்று.

சற்று நெருங்கிப் பார்த்தால், அது ஒரு சிவனடியாரின் உருவம் என்பது தெரியவரும்.

தலையில் சடைமுடியும், நெற்றி

**அமரர் கல்கி**



நரையைத் திருந்திய. அப்போதுதான் நரை தோன்றிய நீண்ட தாடியும், கழுத்தில் ருத்திராட்ச மாலையும், அரையில் காவி வஸ்திரமும், மார்பில் புலித்தோலுமாக அந்தச் சிவனடியார் விளங்கினார். அவர் கையில் கமண்டலம் இருந்தது. அவருடைய முகத்தில் அபூர்வமான தேஜஸ் திகழ்ந்தது. விசாலமான கண்களில் அறிவொளி வீசிற்று. தோற்றமோ வெகு கம்பீரமாயிருந்தது. நடையிலும் ஒரு பெருமிதம் காணப்பட்டது. இந்த மகான் சிவனடியார்தானோ, அல்லது சிவபெருமானே இத்தகைய உருவம் பூண்டு வந்தாரோ என்று திகைக்கும்படியிருந்தது.

இந்தப் பயங்கர ரணகளத்தில் இந்தப் பெரியாருக்கு என்ன வேலை? யாரைத் தேடி அல்லது என்னத்தைத் தேடி இவர் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு போகிறார்?

சிவனடியார் எந்தத் திசையை நோக்கிப் ப்பானாம்ரா, அதற்கு எதிர்த்திசையில் கொஞ்ச தூரத்தில் கருங்குன்று ஒன்று நகர்ந்து வருவது போல் ஒரு பிரம்மாண்டமான உருவம் அசைந்து வருவது தெரிந்தது. அது சோழ மன்னரின் பட்டத்துப் போர் யானைதான்.

அதைக் கண்டதும் சிவனடியார் சிறிது தயங்கித் தாம் நின்ற இடத்திலேயே நின்றார்.

யானையின் தேகத்தில் பல இடங்களில் காயம் பட்டு இரத்தம் வடிந்து கொண்டிருந்தது. நடக்க முடியாமல் அது தள்ளாடி நடந்தது என்பது நன்றாய்த் தெரிந்தது. கீழே கிடந்த போர் வீரர்களின் உயிரற்ற உடல்களை மிதிக்கக் கூடாதென்று அது ஜாக்கிரதையாக அடி எடுத்து வைத்து நடந்தது. துதிக்கையை அப்படியும் இப்படியும் நீட்டி அங்கே கிடந்த உடல்களைத் தடவிப்



பார்த்துக் கொண்டே வந்ததைப் பார்த்தால், அந்த யானை எதையோ தேடி வருவது போல் தோன்றியது.

சற்று நேரத்துக்கெல்லாம், அந்தப் பட்டத்து யானையானது, உயிரற்ற உடம்புகள் குவியலாக ஒன்றன்மேல் ஒன்றாகக் கிடந்த ஓர் இடத்துக்கு வந்து நின்றது. அந்த உடல்களை ஒவ்வொன்றாக எடுத்து அப்பால் மெதுவாக வைக்கத் தொடங்கியது.

இதைக் கண்டதும் சிவனடியார் இன்னும் சற்று நெருங்கிச் சென்றார். சமீபத்தில் தனித்து நின்ற ஒரு கருவேல மரத்தின் மறைவில் நின்று யானையின் செய்கையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

யானை, அந்த உயிரற்ற உடல்களை ஒவ்வொன்றாய் எடுத்து அப்புறப்படுத்திற்று. எல்லாவற்றுக்கும் அடியில் இருந்த உடலை உற்று நோக்கிற்று. அதைத் துதிக்கையினால் மூன்று தடவை மெதுவாகத் தடவிக் கொடுத்தது.

பிறகு அங்கிருந்து நகர்ந்து, சற்றுத் தூரத்தில் வெறுமையாயிருந்த இடத்துக்குச் சென்றது. துதிக்கையை வானத்தை நோக்கி உயர்த்திற்று.

சொல்ல முடியாத சோகமும் தீனமும் உடைய ஒரு பெரிய பிரலாபக் குரல் அப்போது அந்த யானையின் தொண்டையிலிருந்து கிளம்பி, ரணகளத்தைத் தாண்டி, நதியின் வெள்ளத்தைத் தாண்டி, நெல் வயல்களையெல்லாம் தாண்டி, வான முகடு வரையில் சென்று, எதிரொலி செய்து மறைந்தது.

அவ்விதம் பிரலாபித்து விட்டு அந்த யானை, குன்று சாய்ந்தது போல் கீழே விழுந்தது. சில வினாடிக்கெல்லாம் பூகம்பத்தின் போது மலை அதிர்வது போல் அதன் பெரு

டல் இரண்டு தடவை அதிர்ந்தது. அப்புறம் ஒன்றுமில்லை! எல்லையற்ற அமைதிதான்.

சிவனடியார் கருவேல மரத்தின் மறைவிலிருந்து வெளிவந்து, யானை தேடிக் கண்டு பிடித்த உடல் கிடந்த இடத்தை நோக்கி வந்தார். அதன் அருகில் வந்து சிறிது நேரம் உற்றுப் பார்த்தார். பார்த்திப மகாராஜாவின் உடல்தான் அது என்பதைக் கண்டார்.

உடனே அவ்விடத்தில் உட்கார்ந்து அவ்வுடலின் நெற்றியையும் மார்பையும் தொட்டுப் பார்த்தார். பிறகு, தலையை எடுத்து தம் மடி மீது வைத்துக் கொண்டார். கமண்டலத்திலிருந்து கொஞ்சம் ஜலம் எடுத்து முகத்தில் தெளித்தார்.

உயிரற்றுத் தோன்றிய அந்த முகத்தில் சிறிது நேரத்துக்கெல்லாம் ஜீவகளை துளிர்த்தது. மெதுவாகக் கண்கள் திறந்தன. பாதி திறந்த கண்களால் பார்த்திபன் சிவனடியாரை உற்றுப் பார்த்தான்.

"சுவாமி... தாங்கள் யார்?" என்ற தீனமான வார்த்தைகள் அவன் வாயிலிருந்து வந்தன.

"அம்பலத்தாடும் பெருமானின் அடியார்க்கு அடியவன் நான், அப்பா! இன்று நடந்த யுத்தத்தில் உன்னுடைய ஆச்சரியமான வீரச் செயல்களைப் பற்றிக் கேள்விப்பட்டேன். அப்பேர்ப்பட்ட மகாவீரனைத் தரிசிக்க வேண்டுமென்று வந்தேன். பார்த்திபா! உன்னுடைய மாசற்ற சுத்த வீரத்தின் புகழ் என்றென்றும் இவ்வுலகிலிருந்து மறையாது!" என்றார் அப்பெரியார்.

"யுத்தம் - என்னவாய் முடிந்தது, சுவாமி?" என்று பார்த்திபன் ஈனஸ்வரத்தில் கேட்டான். அவனுடைய ஒளிமங்கிய கண்களில் அப்போது அளவிலாத ஆவல் காணப்பட்டது.

"அதைப் பற்றிச் சந்தேகம் உனக்கு இருக்கிறதா, பார்த்திபா? அதோ கேள், பல்லவ சைன்யத்தின் ஜயகோலாகலத்தை!"

பார்த்திபன் முகம் சிணுங்கிற்று. "அதை நான் கேட்கவில்லை சுவாமி! சோழ சைன்யத்திலே யாராவது..." என்று மேலே சொல்லத் தயங்கினான்.

"இல்லை; இல்லை. சோழ சைன்யத்தில் ஒருவன் கூடத் திரும்பிப் போகவில்லை அப்பா! ஒருவனாவது எதிரியிடம் சரணாகதி அடையவும் இல்லை. அவ்வளவு பேரும் போர்க்களத்திலே மடிந்து வீர சொர்க்கம் அடைந்தார்கள்!" என்றார் சிவனடியார். பார்த்திபனுடைய கண்கள் மகிழ்ச்சியினால் மலர்ந்தன.

"ஆகா! சோழ நாட்டுக்கு நற்காலம்



## அருள்வாக்கு

ஒவ்வொரு பிராணிக்கும் ஒவ்வோர் அங்கத்தில் அதிகக் கௌரவம் இருக்கும். சவுரிமான் என்று உண்டு. அதன் கௌரவம் வாலில்தான் இருக்கிறது. மயில் என்றால் அதற்குத் தோகை விசேஷம். தோகையை மயில் ஜாக்கிரதையாக ரட்சிக்கும். யானை எதை ரட்சிக்கும்? தன் தந்தத்தை தீட்டி வெள்ளை வெளேர் என்று வைத்திருக்கும். இந்தப் பிள்ளையார் என்கிற யானை என்ன பண்ணுகிறது என்றால் அந்தக் கொம்பில் ஒன்றையே ஒடித்து, அதனால் மகாபாரதத்தை எழுதிற்று. தன் அழகு, கௌரவம், கர்வம் எல்லாவற்றுக்கும் காரணமாக இருக்கிற ஒன்றைக் காட்டிலும், தர்மத்தைச் சொல்கிற ஒன்றுதான் பெரிது என்பதை இவ்விதம் இந்த யானை காட்டியது. நியாயத்துக்காக, தர்மத்துக்காக வித்தைக்காக எதையும் தியாகம் பண்ண வேண்டும் என்பதை, தானே தந்தத்தைத் தியாகம் பண்ணிக் காட்டியிருக்கிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

பிறந்துவிட்டது சுவாமி! இவ்வளவு சந்தோஷமான செய்தியைச் சொன்னீர்களே? - உங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்றான்.

"எனக்கு ஒரு கைம்மாறும் வேண்டாம் பார்த்திபா! உன்னைப் போன்ற சுத்த வீரர்களுக்குத் தொண்டு செய்வதையே தர்மமாய்க் கொண்டவன் நான். உன் மனத்தில் ஏதாவது குறை இருந்தால் சொல்லு; பூர்த்தியாகாத மனோரதம் ஏதாவது இருந்தால் தெரிவி; நான் நிறைவேற்றி வைக்கிறேன்" என்றார் சிவனடியார்.

"மெய்யாகவா? ஆகா என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம் சுவாமி! உண்மைதான்; என் மனத்தில் ஒரு குறை இருக்கிறது. சோழநாடு தன் புராதனப் பெருமையை இழந்து இப்படிப் பராதீனமடைந்திருக்கிறதே என்பதுதான் அந்தக் குறை. சோழநாடு முன்னைப் போல் சுதந்திர நாடாக வேண்டும் - மகோன்னதமடைய வேண்டும். தூர தூர தேசங்களில் எல்லாம் புலிக்கொடி பறக்க வேண்டும் என்று கனவு கண்டு வந்தேன்; என்னுடைய வாழ்க்கையில் அது கனவாகவே முடிந்தது. என்னுடைய மகன் காலத்திலாவது அது நனவாக வேண்டுமென்பதுதான் என் மனோரதம். விக்கிரமன் வீரமகனாய் வளர வேண்டும். சோழ நாட்டின் மேன்மையே அவன் வாழ்க்கையின் இலட்சியமாயிருக்க வேண்டும். உயிர் பெரிதல்ல - சுகம் பெரிதல்ல - மானமும் வீரமுமே பெரியவை என்று அவனுக்குப் போதிக்க வேண்டும். அன்னியருக்குப் பணிந்து வாழும் வாழ்க்கையை அவன் வெறுக்க வேண்டும். சுவாமி! இந்த வரந்தான் தங்களிடம் கேட்கிறேன். தருவீர்களா?" என்றான் பார்த்திபன்.

சக்தியற்ற அவனது உடம்பில் இவ்வளவு ஆவேசமாகப் பேசும் வலிமை அப்போது எப்படித்தான் வந்ததோ, தெரியாது. சிவனடியார் சாந்தமான குரலில், "பார்த்திபா! உன்னுடைய மனோரதத்தை நிறைவேற்றுவேன் - நான் உயிரோடிருந்தால்" என்றார்.

பார்த்திபன், "என் பாக்கியமே பாக்கியம்! இனி எனக்கு ஒரு மனக்குறையுமில்லை. ஆனால், ஆனால் - தாங்கள் யார், சுவாமி! நான் அல்லும் பகலும் வழிபட்ட சிவபெருமான்தானோ? ஆகா! தங்கள் முகத்தில் அபூர்வ தேஜஸ் ஜொலிக்கிறதே! எங்கள் குலதெய்வமான ஸ்ரீ ரங்கநாதனேதான் ஒருவேளை இந்த உருவெடுத்து..." என்பதற்குள், சிவனடியார், "இல்லை, பார்த்திபா! இல்லை. அப்படியெல்லாம் தெய்வ நிந்தனை செய்யாதே!" என்று அவனை நிறுத்தினார். பிறகு அவர், "நானும் உன்னைப் போல் அற்ப ஆயுளையுடைய மனிதன்தான். நான் யாரென்று உனக்கு அவசியம் தெரிந்து கொள்ள வேண்டுமா? அப்படியானால், இதோ பார்!" என்று சொல்லி, தம் தலைமீதிருந்த ஜடாமுடியையும் முகத்தை மறைத்த தாடி மீசையையும் லேசாகக் கையிலெடுத்தார்.

கண் கூசும்படியான தேஜஸுடன் விளங்கிய அவருடைய திவ்ய முகத்தைப் பார்த்திபன் கண்கொட்டாமல் பார்த்தான்.

"ஆகா தாங்களா?" என்ற மொழிகள் அவன் வாயிலிருந்து குமுறிக் கொண்டு வந்தன.

அளவுக்கடங்காத, ஆழங்காண முடியாத ஆச்சரியத்தினால் அவனுடைய ஒளியிழந்த கண்கள் விரிந்தன.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்தக் கண்கள் மூடி விட்டன; பார்த்திபனுடைய ஆன்மா அந்தப் பூத உடலாகிய சிறையிலிருந்து விடுதலையடைந்து சென்றது.

*(தொடரும்)*

# கோடை மழை

## மேலாண்மை பொன்னுசாமி



இப்படியாகும் என்று கனா கூடக் கண்டதில்லை, பரமசிவம். உள்ளுக்குள் இடிவிழுந்த பச்சை மரமாக திகைப்பில் அரண்டு போனான். 'மனுசன் புத்தி இம்புட்டுத் தாழ்ந்து போகுமா? இன்றைக்கு நடந்தது நிஜம்தானா' இன்னும் அவனால் நம்ப முடியவில்லை. ஒரு மாயமான சந்தேகம் கூட அவனுள் மின்னி மறைந்தது.

அடக் கொடுமையே... இந்த வெட்கக் கேடான கேவலக்கூத்தை எப்படிப் போய் பெண்டாட்டியிடம் சொல்றது? கரிபூசிக் கொண்ட மூஞ்சியோடு எப்படிப் போய் நிக்கிறது? எம்புட்டு ஏளனமாய்ப் பார்ப்பாள்?

ரொம்ப முட்டிப்பாக இருந்தது, பரமசிவத்துக்கு.

திருமங்கலம் தேவர் சிலைக்கு வடக்கே வரிசையாகக் கடைகள். கடைகளின்முன்பு பஸ்ஸுக்குக் காத்திருக்கிற ஜனக்கூட்டம். கூட்டத்தில் ஒட்டாமல் அந்நியமாய்... இவன். வந்துபோகாத புதுஇடம். அந்நியமான சூழல், 'வெறுக், வெறுக்'கென முழித்துக் கொண்டிருந்தான், கோலத்தில் ஒட்டாத ஒற்றைப் புள்ளியாக.

மனுசமக்கள் முகங்களை ஏறெடுத்துப் பார்க்கவே மனம் சகிக்கவில்லை. முகம் கொடுத்து யாரிடமும் பேச மனசில்லை. மனம் முழுக்க பரவிக் கிடந்த வெறுப்பு, வேப்பங் கசாயம் குடித்தவன்போல. மனுச வர்க்கத்தையே காறித் துப்பணும் போலிருந்தது.

கால், கை, முகறை லட்சணத்தோடு நிமிர்ந்து நடக்குவறனெல்லாம் மனுசனா? மனுசக் கொணம் அத்துப்போன நெழல்களையெல்லாம், மனுஷங்க என்று எப்படி நினைக்க? ஈரமத்த ஜெம்மங்க. ஒலர்ந்து போன பிரேதங்க.

அவனுள் தாறுமாறான நினைவோட்டம். கொதிக்கிற மனசுக்குள் தளதளக்கிற சோற்றுப் பருக்கைகளாக... நினைவுகள். நினைவின் வாலைப் பிடித்துக் கொண்டு இழுபடும் பரமசிவம்.

மணி ஏழரையாகி விட்டது. அவ்வளவாகக் குளிரில்லை. ஆடிக் காற்று இப்பவே லேசுபாசாகத் தலைகாட்டி அசைத்துப் பார்க்கிறது. ரோடு முழுக்க கடை வரிசையின் நிழல். பஸ் ஸ்டாண்டிலிருந்து வெளியேறுகிற வெள்ளை பஸ்கள், கலர்பஸ்கள். எதிர் வரிசையில் கடைகள். ரிக்‌ஷாக்களில் இழுத்து மூடித் தூங்குகிற மனிதர்கள். ஆளுயரச் சுவரில் வர்ணத்தில் பாரதி படம். பக்கத்தில் ஜனநாயக வாலிபர் சங்க மாநாட்டு விளம்பரம். அகல அகலமான வர்ண எழுத்துக்கள்.

கண்ணெல்லாம் பீளை அப்பியிருக்க பரிதாபக் கோலத்தில் ஒரு

பிச்சைக் காரக் கிழவர், இவனைச் சுற்றியுள்ள ஜன அடர்த்திக்குள் தடுமாறி வந்தார். சொங்கு பற்றிய உடம்பு. கந்தலாகிப் போன எலும்புக் கோர்வை. மரக் குச்சியின் பலத்தில் ஊர்ந்து வருகிற அவர், ஒவ்வொரு ஆளிடமும் கையேந்துகிறார். "அய்யா...அய்யா... நாதியத்த சிவன்... ஏதாச்சும் குடுங்கய்யா... தர்மம் பண்ணுங்கய்யா."

மனசைப் பிசைய வைக்கிற நைந்த குரல். அந்தக் குரலின் அவலம், யாரையும் போய்த் 'தொட'வில்லை. வெள்ளையும் சொள்ளையுமான ஆட்கள், அருவருப்போடு ஒதுங்கினனர். வெறுப்பின் வார்த்தைச் சிறல்கள்.

"ச்சே! இந்தத் தொல்லையே பெரிய இழவாப் போச்சு."

"கிழடெல்லாம் 'போய்ச்' சேர வேண்டியதுதானே? பூமியிலேயிருந்து ராஜ்யம் ஆளப் போகுதாக்கும்?"

உலர்ந்த மனசுகளின் சுவாசமாய்... முணுமுணுப்புகள். ஈரமற்றுப்போன இருதயங்களைச் சுமந்து அலைகிற பிரேதங்களின் துர்நாற்றம்.

ஒரு வாலிபன்- ஒரு கணவன்- ஒரு தகப்பன்- ஒரு மாமன், ஒரு தாத்தா. எல்லாமாகவும் இருந்திருப்பார் இந்தக் கிழடு. எல்லாராலும் கைவிடப்பட்டவர். ஈரமற்றுப் போன மனித உறவுகளின் அடையாளமாய்... இந்த நாதியத்த சிவன்.

பரமசிவத்துக்குப் பரிதாபமாக இருந்தது. தனது தாத்தாவே 'இப்படி' திரிவதாகப் பிரமை. இவன் பக்கத்தில் அவர் வந்தவுடன், பையைத் துழாவினான். ஒரு ரூபாய் நாணயத்தை அவரது உள்ளங்கை தொட்டு வைத்தான்.

சுற்றியிருந்த பிரேதங்கள்... இவனை ஏளனமாகப் பார்த்தன.

இவனுக்கு யாரையுமே பார்க்கப் பிடிக்கவில்லை. மனசு கிடந்து எரிந்தது. வடக்காமல் அண்ணாந்து பார்த்தான், மதுரையிலிருந்து பஸ் வருகிறதா என்று.

வந்தது. கை நீட்டினான். பஸ்ஸில் உட்கார இடம் கிடைத்தது. நல்லவேளை என்று மனசு ஆசுவாசப்பட்டது. கண்டக்டர் பக்கத்தில் வந்தார். "எங்க போவணும்?"

"ராசபாளையம்."

ராசபாளையம் போய்ச்சேர மணி பத்தாகிவிடும். சரியாக பத்து பத்துக்கு கோவில்பட்டி பஸ் புறப்படும். அதைப் பிடித்து விட்டால்.... கலிங்கப்பட்டியில் இறங்கி-பொடி நடையாக நடந்தால், ரெண்டு மைலில் ஊர்.

சாப்பிட நேரமிருக்குமா? வெறும் வயிற்றோடு நடந்தால், ஆளைச் சாய்த்துவிடும் பசிக்கிறுகிறுப்பு. ஏறு வெயில் வேறு, ஆளை வறுத்தெடுத்துவிடும். அதை நினைத்தால்... இப்போதே உள்ளுக்குள் தகிக்கிற வெயில்.

**"நான் பார்த்து எந்த கழுதை கழுத்துல தாலியைக் கட்டச் சொன்னாலும், உடனே என் பையன் கட்டிடுவான்!"**

**"உங்களுக்கு என்ன போச்சு... நாளைக்கு உதை வாங்கப் போறது உங்க மகனேதான்!"**

**- சீர்காழி வி. ரேவதி**

"பாரு... 'போன காரியம் பழம்'னு வந்து நிப்பேன், தெரியுமா? எல்லாரையும் போல நெனைச்சிராதே... எங்க சுப்ரமணியத்தை" என்று கித்தாப்பாக சவால் விட்டு விட்டு நம்பிக்கையோடு புறப்பட்டவன்.

கித்தாப்பெல்லாம் கிழிந்து... நார்நாராகி... ச்சே! சுப்ரமணியம் இப்படி மாறிட்டானே... என்னைக் கேவலப்படுத்திட்டானே.. இப்படியும் விசுவாசம், மனித உறவுகள்.. இதுகளுக்கெல்லாம் அர்த்தமில்லையா? அபத்த நினைப்புகள்தானா? ச்சே!

பஸ்ஸின் ஜன்னலில் கறுப்புக் கண்ணாடி.. அதன் வழியே பார்த்தான். வட்டமடித்து ஓடுகிற பருத்திக் காடுகள். கல்லைக் கண்ட நாயாக, விருட் விருட்டென்று பின் நோக்கி ஓடுகிற வேப்பமரங்கள்.. கருவேல மரங்கள்... மஞ்சணத்தி மரங்கள்... ஆடுகளை மேய்க்கிற ஆட்டுக்காரர்கள்.... வேப்ப மரங்களில் மஞ்சள் மஞ்சளாய் பழக் கொத்துக்கள்.

கூலி வேலைக்கு லாயக்கற்ற குச்சி உடம்பு, சுப்ரமணியத்துக்கு. முழுத்த இளவட்டமான பின்னும், அம்மாவின் கூலி உழைப்பில் வயிற்றை நனைத்துக் கொண்டே... தெருவில் சும்மாவே சுற்றித் திரிந்தான். ஊரில் யாரும் அவனை உப்புக் கல்லுக்கு கூட மதிக்க மாட்டார்கள். வெறும் பயலாகத் திரிந்த அவன் மீது... பரமசிவத்தின் அய்யா சங்கையா பார்வை விழுந்தது.

சங்கையா கைமுறுக்கான ஆள். சமுத்திரமான சம்சாரித்தனம். ரெண்டு ஜோடி காளை மாடுகள், வண்டி வைத்து பெரிய விவசாயம். தொழுவம் நிறைந்த கால்நடைகள். மூன்று சொந்தக் கிணற்றுப் பாசனம். வேறுசில கிணறுகளிலும் பங்குப் புஞ்சை. பசையுள்ள சம்சாரி. நெஞ்சிலும் நிறைய ஈரம்.

"என்னலே, முழுத்த எளவட்டமாயிட்டே. சும்மாவே தெருக்காட்டிலே திரிஞ்சா... என்ன அர்த்தம்?"

"பெறகென்ன செய்ய மாமா? வேறு வழியில்லியே.."



"வழி ஏதாச்சம் வைச்சிருக்கியா?"

"கையிலே துட்டு துக்காணி இருந்தா... சைக்கிள்லே ஏதாச்சம் ஏவாரம் பண்ணலாம்."

"ஏவாரம் பண்ணிருவியா?"

"ஆசையிருக்கு. ஆளாகி விட முடியும்னு தெம்பு இருக்கு."

"அப்பச் சரி... ஆடி மாசம் முடியட்டும். ஒரு வழி பாப்போம்."

அவரது வார்த்தைகளில் மனசின் ஈரம். சொன்னபடியே ஆவணி மாதத்தில் முந்நூறு ரூபாய் தந்தார். "தொழுவத்துலே ஒரு பழைய சைக்கிள் கெடக்கு. எடுத்துக்க" என்றார்.

வாழ்க்கையில் தான் யார் என்று நிரூபித்துக் காட்ட வேண்டுமென்ற வெறி, சுப்ரமணியனுக்கு. உப்புக்கல்லுக்குக்கூட மதிக்காத ஊர்க்காரர்கள் கண்முன்னால், வைரக்கல்லாக ஜொலித்துக் காட்ட வேண்டுமென்ற ஒரு வேட்கை.

சில்லறைப் பருத்தி வியாபாரம் செய்தான். சண்டு வற்றல், வேப்பமுத்து, ஆமணக்கு, என் என்று எல்லாப் பொருளையும் சம்சாரிகளிடம் வாங்கி காசாக்கினான். மறு வருஷமே பெரிய வியாபாரியாகி விட்டான்.

வண்டிப் பாரமாக பருத்தி மருகைகளும், மிளகாய் வற்றல் மருகைகளும் ராசபாளையம் கமிஷன் கடைக்குப் போயிற்று. சங்கையாவின் மன ஈரம், உலர்ந்துகிடந்த அவன் வாழ்க்கை முழுக்க படர்ந்து.. பயிர் பச்சைகள் முளைத்தன.

சுப்ரமணியத்துக்கு சங்கையாதான் பெண் பார்த்துக் கல்யாணம் 'மூய்த்து' வைத்தார். திருமங்கலத்தில் பெண். ரொம்ப வசதியான வீடு. ஒரே பெண். அடித்தது யோகம். ஆள்... பெரிய ஆளாகி விட்டான்.

திருமங்கலத்திலேயே கடை ஒன்று கிடைத்தது. பெரிய அளவில் பலசரக்குக் கடை வைக்கப் போவதாக வந்து சொன்னான். சங்கையா பெருமிதத்தோடு வாழ்த்தியனுப்பினார். கையில் நூற்றியொன்றைத் திணித்து, திருநீறு பூசி ஆசி வழங்கினார்.

அப்போது போனவன், சங்கையா சாவுக்குத்தான் ஊர் வந்தான்.

சங்கையா சாவுக்குப் பிறகு... அந்தக் குடும்பம், கவிழ்த்த தான்யப் பெட்டி மாதிரி சட்டென்று சரிந்துவிட்டது. பண்ணையார் நினைப்பில் மத்தியதர சம்சாரி மிதந்தாலும்... அவர் குடும்பம் நொறுங்குவதற்கு ரெண்டு கல்யாணம், ரெண்டு இழவு வந்தால் போதாதா? சங்கையா மூன்று பெண் மக்களுக்கும், பெரும் தடபுடலாய்க் கல்யாணம் செய்தார். பரமசிவத்துக்கும் கல்யாணம். ஏழு ஊர் ஜனமும் வந்து பந்துகளாக ஆக்கி அவித்து கொண்டாட்டமாக நடந்த கல்யாணங்கள். சுற்றுபட்டி பத்து ஊர்களிலும் இந்தக் கல்யாணங்களைப் பற்றித்தான் ஒரு மாதமாய்ப் பேச்சு.

சங்கையா மண்டையைப் போட்ட பிறகுதான்... அதன் குட்டு நட்டு உடைந்தது. எல்லாம் பெரிய பெரிய கடன்கள். பத்திரக் கடன்கள்.

கடைசியாக பரமசிவத்துக்கு மிஞ்சியது... ஒரு ஓடு போட்ட வீடும், ஒரு கிணற்றுப் புஞ்சையும் மட்டும்தான். வாழ்ந்து கெட்ட குடிக்குரிய பரிதாபத்திற்குள் பரமசிவம்.

'நல்லது, பொல்லது' (கல்யாணம் - இழவு) களுக்கு கிராமத்திற்கு காரில் வந்து போகிற சுப்ரமணியம், பரமசிவத்தை வந்து பார்த்து நாலு வார்த்தை பேசாமல் போக மாட்டான். கௌரவம் பார்க்காமல், நன்றி விசுவாசம் குன்றாமல் எல்லாரிடமும் சொல்வான்.

"எனக்குக் குலதெய்வம் சங்கையா மாமாதான். அவர்தான் என்னை மேடேத்திவிட்டவரு. அவர் இல்லேன்னா... நா இன்னைக்கும் உப்புக் கல்லுக்குப் பெறாத பயலாத்தானிருப்பேன்."

மனசில் உள்ள உண்மையை நேர்மையோடும் பெருமையோடும் சொல்லுவான்.

ச்சே! என்ன மனுசப் பிறவிக! மனுசத் தன்மையில்லாத மனுசஜென்மங்க...

பரமசிவத்துக்கு வீட்டில் ஏக நச்சுப் பிடுங்கல்கள். சிறு சம்சாரிக்குரிய பணநெருக்கடிகள். அதிலும் இந்த வருஷம் சொஸைட்டிகாரர்கள் 'ஜப்திகெடுபிடி வசூல்' என்று மூர்க்கமாய்க் களத்தில் இறங்கி விட்டதில்... இவன்பாடு நரகப்பாடாகி விட்டது.

ஜப்தி என்கிற அவமானச் சாவிலிருந்து குடும்ப கௌரவத்தை மீட்டியாகனுமே என்ற பதற்றத்தில் கையிலிருந்த பணம், கம்மல் மூக்குத்தி அடகு வைத்த பணம் எல்லாவற்றையும் அரித்துப் பொறுக்கி ரசீது போட்டு விட்டான்.

கண்மாய் மண் அடிக்க... குப்பையடிக்க... மிளகாய் விதை வாங்க... உழுக... கிடைபோட... நாற்றங்கால் போட... இப்படி நிறைய்ய அவசரங்கள். கையில் துட்டில்லை. ஊரில் புரட்டவும் வழியில்லை. கழுத்தாம்பிடியாக இருந்தது. கண்ணு முழிபிதுங்கியது.

வழிதெரியாமல் குருட்டுப் பூனை போல தடுமாற... வீட்டுக்குள் ஒரே சண்டை சத்தம். அழுகை புலம்பல். கோபமும் சாபமுமாய்



## மோட்டார் சைக்கிள் பரிசுத் திட்டம் - 13

"என்னங்க, உங்க சலூன் கடை வாசல்ல 'அரசியல்வாதிகளுக்கு அனுமதியில்லை'ன்னு எழுதி வைச்சிருக்கீங்க...?"

"துண்டு போட்டுனா திருப்பித் தர மாட்டேங்கறாங்க சார்!"

- டி. எஸ். திருமலைராயன்

ஜோக் படிச்சாச்சா? சிரிக்கச் சில நொடிகள் எடுத்துக்கலாம். அப்புறம் படத்தில் எத்தனை கத்திரிக்கோல்கள் உள்ளன என்று எண்ண ஆரம்பியுங்கள். ஒளிந்தும் ஒளியாமலும் உள்ளவற்றை ஒட்டுமொத்தமாய்க் கண்டுபிடித்து எண்ணி, கூப்பனைப் பூர்த்தி செய்து வைத்துக் கொள்ளவும். 26 வது வார முடிவில் மற்ற கூப்பன்களுடன் அனுப்பவும். அதிகம் பங்கேற்று, அதிகபட்சப் போட்டிகளில் வெற்றி பெறுபவருக்கு மோட்டார் சைக்கிள் பரிசு. ஆறுதல் பரிசுகள் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

### போட்டி - 13

படத்தில் உள்ள கத்திரிக்கோல்களின் எண்ணிக்கை : ...........

என் பெயர் : ..........................................................................

விலாசம் : ..........................................................................

வீடே கோடைகால வெக்கையாயிற்று.

அப்பத்தான்... நன்றி விசுவாசம் குன்றாமல் - நல்ல நிலையில் - இருக்கிற சுப்ரமணியம் ஞாபகம் வந்தது. ஆனால் போகத் தயக்கம். அவனிடம் போய்க் கையேந்துவதா? நம்மைப் பற்றி என்ன நினைப்பான்? நம் குடும்பகௌரவம் குறையாதா? என்றெல்லாம் ஆயிரத்தெட்டு தயக்கங்கள். சலனங்கள். ஆயினும் -கழுத்தாம்பிடியாக இருக்கிற துட்டுச் சிக்கல்.

பெற்றவர்கள் செய்த பாவ புண்ணியங்கள், பிள்ளைகளுக்கு வந்து சேரும் என்பார்கள். பாவத்தை அனுபவிக்கிறோம். புண்ணியத்தையும் தான் அனுபவித்துப் பார்ப்பமே என்ற நினைப்பு. அதில் சுய சமாதானம்.

ரெண்டாயிரம் என்றால் போதும். ஓசியா? வெள்ளாமையில் முதல் கடனாக இதை அடைத்து விடலாம் என்கிற மனச் சமாளிப்பு. புறப்பட்டு விட்டான்.

நேற்றுச் சாயங்காலம். இவனைப் பார்த்தவுடன் சுப்ரமணியம் எவ்வளவு சந்தோஷப்பட்டான். "வராத ஆளு வந்துட்டீக" என்று ஒரு குழந்தையைப் போல குதூகலம் பொங்கி வழியச் சிரித்தான். தடபுடலான உபசரிப்பு. கடையிலும் சரி... வீட்டிலும் சரி... இவனை ஆசை ஆசையாகக் கொண்டாடினான், சுப்ரமணியம். என்ன ஏது என்று அக்கறையாக விசாரித்தான். பரமசிவம் தனது பாடுகளையெல்லாம் சொல்லச் சொல்ல... ரொம்ப வருந்தினான்.

"உங்களுக்கா... இந்தக் கஷ்டம் வரணும்? ஊரே கையெடுத்துக் கும்புடுற மாதிரி கோபுர வாழ்க்கை வாழ்ந்தவீடு" என்று உளமாரக் கசிந்தான். அசலான கசிவு.

பங்களாவின் மொட்டை மாடியில் ராத்திரி படுக்கப் போகிற போது, பரமசிவத்தின் மனசில் பரம நிம்மதி. வந்த காரியம் கை கூடிவிடும் என்ற நம்பிக்கை. சந்தோஷ நினைவுகள் மயிலிறகாக மனசை நீவ, நல்ல உறக்கம்.

விடிந்தவுடன் சகலமும் இருண்டு விட்டது. சுப்ரமணியம் விட்டேற்றியாக பேசினான். வித்தியாசமான முகத்தோற்றம். கண்ணுக்குள் அடைக்கோழியின் சிடுசிடுப்பு.

ஆயில் மில்லுக்கான செக், பருப்பு மூட்டைகளுக்கான செக், சீரக மூட்டைகளுக்கான செக்- எல்லாம் பேங்கில் வந்து கிடக்கின்றன.

இவற்றுக்கெல்லாம் பணம் புரட்டிக் கட்ட முடியாத சிரமங்கள் பற்றி பொய்ச் சோகமாகப் புலம்பினான். ஈரமற்ற புலம்பல்.

ராத்திரிக்குள் என்ன ஆயிற்று? என்ன மாய மந்திரம்? கொடுத்து உதவுவதில் என்ன சிரமம்? எச்சிற்பருக்கை சிதறினால்... எறும்புக்குப் பத்துநாள் உணவு.

'விசுவாசத்துக்காக உதவி செய்தால்... அந்தப் பணத்தைத் திரும்பக் கேட்க முடியாமல் போகலாம். தாட்சண்யம் பார்த்தால்... அடிக்கடி வந்து பணம் கேட்கிற எண்ணத்தை ஏற்படுத்தி விடலாம். வீண் தொல்லையாகி

# COCK BRAND FILE




TRADE MARK

**47 ஆண்டுகளாக உங்கள் பத்திரங்களைப் பாதுகாக்க எங்கள் சேவல் மார்க் ஃபைல்கள் பயன்பட்டு வருவதுபோல உங்கள் சேமிப்புகளை பாதுகாக்க எங்கள் டெபாசிட் திட்டம்...**

**குமுலேட்டிவ் டெபாசிட்டில் முதலீடு செய்து மூன்றே ஆண்டுகளில் இருமடங்காக பெறுங்கள்.**

கணக்கிடப்படும் வட்டி விகிதம்

# 24%

PER ANNUM

| மாதங்கள் | ரூ.1000க்கு முதிர்வுத் தொகை | வருடாந்திர வட்டி சதவீதம் |
|---|---|---|
| 12 | ரூ. 1260 | 26% |
| 24 | ரூ. 1587 | 29.35% |
| 36 | ரூ. 2000 | 33.33% |
| 48 | ரூ. 2520 | 38% |
| 60 | ரூ. 3175 | 43.5% |

குறைந்தபட்ச டெபாசிட் ரூ.1000

# MUTHUVEL INDUSTRIES

**Mfrs. of COCK BRAND OFFICE FILES**
**Angappa Chettiar Industrial Complex,**
20-A, Round Road, P.B. 32,
DINDIGUL - 624 001. TAMILNADU.

✆ Off: (0451) 23316, 25260 & 27637. Res: 25643 & 23726.
Grams: COCKFILE.

***உங்கள் முன்னேற்றமே எங்கள் வளர்ச்சி***

ADWAVE/MU/4698/Tam BR

## ஒரு நாளில் நீங்கள்....

மூச்சு விடுவது - 23,040 முறை; சுவாசிப்பது - 438 கனஅடி காற்றை; உண்பது - 1 கி.கி.; பருகுவது - $2^1/_2$ லிட்டர்; வெளியேற்றுவது - $^7/_8$ பவுண்டு; பேசுவது 4800 சொற்கள்; அசைப்பது - 750 தசைகளை; வேலை கொடுப்பது - 70 லட்சம் மூளைத் திசுக்களுக்கு; இதயத்தைத் துடிக்க விடுவது - 1,03,689 முறை; இரத்தத்தை ஓடவிடுவது - 1,68,000,000 மைல்.

ஆதாரம் : அக்கு ப்ரஷர்மெஷின் வெளியீடு

தகவல் : ஆர். பி. சாரதி

---

விடும்' என்றெல்லாம் யோசித்திருப்பானோ...

கடைசியில் கை விரித்து விட்டான். டீ வாங்கிக் கொடுத்து அனுப்பிவிட்டான், பாவிப்பயல். ஈரக்கசிவேயில்லாமல் முகத்தை இறுக்கிக் கொண்டான்.

பரமசிவத்துக்கு ஓரே வெட்கக் கேடாகி விட்டது. 'ஏண்டா இங்க வந்தோம்' என்றாகி விட்டது. அற்பப்பயலிடம் வந்து கையேந்திட்டோமே, ஈரமத்து உலர்ந்த சக்கைப் பயலிடம் கேனத்தனமாய் மனுசத் தன்மையை எதிர் பார்த்து விட்டோமே...

இப்படியும் சொல்ல ஒருத்தனுக்கு மனசு வருமா? எங்கய்யாவினால் மேடேறிப் போனவன். அந்த நன்றி விசுவாசம் கூட இல்லாமல், மனம் கூசாமல் வெறும் கையை வீசிட்டானே...

இப்படியும் உலகத்தில் மனுசத்தன்மை அற்றுப் போகுமா? காலம் கெட்டுப் போய் விட்டது என்பது வாஸ்தவம்தான். ஆனால் இவ்வளவு மோசமாகவா கெட்டுவிட்டது? மனிதர்களே உலர்ந்து போகிற அளவுக்கா பாழாகி விட்டது? அடக் கொடுமையே...

**ரா**சபாளையம் பஸ்ஸ்டாண்டிற்குள் வண்டிபோய் மூச்சுவிடவும்... ஆளுக்குமுந்தி இறங்கினான், பரமசிவம். கோவில்பட்டி பஸ் புறப்படத் தயாராகி உறுமிக் கொண்டிருந்தது.

ஒரு நிமிஷம் பிந்தியிருந்தால் கூட... பஸ்ஸைப் பிடித்திருக்க முடியாது. 'நல்ல வேளை' என்று மனசு ஆசுவாசப்பட, பஸ்ஸில் ஓட்டமாய் ஓடிப்போய் ஏறிக் கொண்டான்.

முதுகுடியைக் கடந்தது, பஸ். இவனுக்குள் பசிக்கிறுகிறுப்பு. ஏறுவெயிலின் உக்ரம். கன்னென்று காந்துகிற வெயில். கலிங்கப் பட்டியில் இறங்கி... ரெண்டு மைல் நடக்கணும் என்ற நிஜம், ஒரு மலை மாதிரி குறுக்கே நின்றது. நடக்க முடியுமா என்கிற மலைப்பு, நிமிஷத்திற்கு நிமிஷம் மலைப் பிரம்மாண்டமாகியது.

கலிங்கப்பட்டியில் இறங்குகிறபோது...

மணி பதினொன்றேகால். ஒரு டீ குடிக்கலாமா என்று நினைத்தான். மனசெல்லாம் சுப்பிரமணியத்தின் கசப்பு. பச்சைத் தண்ணீர் கூட குடிக்க மனசில்லை.

"என்ன ஆச்சு? போன காரியம் பழமா?" என்று கேட்கப் போகிற மனைவியை நினைக்க நினைக்க... பிடுங்கித் தின்கிற அவமான உணர்வு. அந்தக் கணத்தைச் சந்திக்கிற பயங்கரம், மனசுக்குள் பிரட்சி.

வடக்காமல் நடந்தான். பஜாரில் நிற்கிற எந்த மனிதரையும் பார்க்க மனசில்லை. சகிக்க முடியாத வெறுப்புணர்ச்சி. ஆர்.வி.எஸ். ஓர்க் ஷாப்பைக் கடந்து... தார் ரோட்டிலிருந்து விலகி... மண்ரோட்டில் நடந்தான்.

உயர்ந்த பனை மரத்தின் ஓலைகளுக்கிடையில் சூரியன் துண்டுதுண்டாக உடைந்து எரிந்தது. அக்கினித் துண்டுகள், உடம்பு முழுக்க அயர்ச்சி. உயிரே கழன்று போய்க் கொண்டிருப்பதைப் போன்ற சோர்வு. கண்ணெல்லாம் காந்தல். வாய் முழுக்க உலர்ந்து போய், கீழ் தட்டில் வெடிப்பின் வலி, நடக்க முடியாத பலவீனம். வயிற்றை கவ்விப்பிடிக்கிற மாதிரியோர் உபாதை. அப்படியே உட்கார்ந்து விடலாமா என்கிற அளவுக்கு மனத்தளர்ச்சி.

பின்புறத்தில்... ஓர் அரவம்.

ஒரு சைக்கிளில் வந்து கொண்டிருந்த முத்துமாரி, பக்கத்து ஊர்க்காரன். இவனைக் கண்டதும் சைக்கிளிலிருந்து இறங்கினான்.

"அடடே... பரமசிவம் அண்ணாச்சியா? எங்கேயிருந்து வாரீக?"

"திருமங்கலம் போயிருந்தேன்."

"ஊருக்குப் போகணுமா?"

"ம்"

"சைக்கிள்லே ஏறிக்கோங்க. நா வீட்லே கொண்ணாந்து விட்டுருதேன்."

"நீ உன்னோட ஊருக்குப் போகணும்லே?"

"அதுக்கென்ன? உங்களை உங்க ஊர்லே விட்டுட்டு அப்புறமா நா ஊருக்குப் போறேன்."

"எதுக்கு ஒனக்கு வீணாச் சிரமம்?"

"இதெல்லாம்... ஒரு . சிரமமா? இந்தச் சின்ன வேலையிலே நா தேய்ஞ்சா போறேன்? உங்க அய்யா செய்கைக்கும், உங்க கொணத்துக்கும் முன்னாலே இதெல்லாம் ஒரு சிரமமா? இன்னும் என்னென்னமோ செய்யலாமே... மொதல்லே, ஏறுங்க கேரியர்லே."

அந்த நேரத்திற்கு இந்த உதவி பெரிய உதவிதான். முத்துமாரியின் சொற்கள், அவனுக்குள் கோடை மழையாக இறங்கி பரவசப் படுத்தியது.

பரமசிவத்துக்குள் ஒரு நீர்ச்சுனையின் குளிர்முகம். மனிதர்கள் இன்னும் உலர்ந்து விடவில்லை என்கிற நினைவுச்சுனை.

பெண் குழந்தை பிறந்தது என்று கவலை வேண்டாம்!
அதனை கொண்டு சென்று அரசு தொட்டிலில் இட வேண்டாம்!

உங்கள் பெண், ஆண் குழந்தைகளை படிக்க வைக்க திருமணம் முடிக்க கவலை கொள்ள வேண்டாம். இதோ ஒரு அருமையான திட்டம்! சிறிய முதலீடு! பெரிய வருமானம்!!

## திருமாங்கல்ய திருமண திட்டம்

| வயது | தாங்கள் செலுத்தும் தொகை | டெப்பாசிட் செய்யும் மாதங்கள் | தங்களுக்கு கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| 1 வயது | ரூ. 1,000/- | 240 | 64,000 |
| 1 வயது | ரூ. 2,500/- | 240 | 1,60,000 |
| 1 வயது | ரூ. 5,000/- | 240 | 3,20,000 |
| 5 வயது | ரூ. 15,000/- | 180 | 3,60,000 |
| 10 வயது | ரூ. 45,000/- | 120 | 3,60,000 |

* இவை தவிர இன்னும் பல டெப்பாசிட் திட்டங்களும், 6 மாத வட்டி 1 வருட வட்டி டெப்பாசிட் செய்தவுடனேயே பெறும் திட்டங்கள் உண்டு.

** தங்க நகை, இந்தியாவில் எங்கும் உள்ள சொத்துக்களுக்கும் பணம் கிடைக்கும்.

தொடர்பு கொள்க!

வேவா தேவிகள் பங்குதாரர்களுக்கு மட்டும் — செவ்வாய் வார விடுமுறை



# சசிநாத் சாஸ்வத நிதி லிமிட்டெட்

H.O. 36, ரங்கநாதன் தெரு,
சென்னை - 600 017. Ph : 4346786
கிளைகள் : 35, M.C. ரோடு சென்னை - 600 021.
34, C, ரயில்வே ரோடு, காஞ்சிபுரம் - 631 501.
56, கடப்பா டிரங் ரோடு, திருத்தணி - 631 209.

மக்கள் சேவையில் 17 ஆம் ஆண்டு

சசிநாத்துடன் இணைவோம்! சௌவுக்கியமாக வாழ்வோம்!

மகளிர் மட்டும்! மகளிர் மட்டும்! மகளிர் மட்டும்!
மகளிர் மட்டும்! மகளிர் மட்டும்! மகளிர் மட்டும்! மகளிர் மட்டும்!
மகளிர் மட்டும்! மகளிர் மட்டும்! மகளிர் மட்டும்! மகளிர் மட்டும்!



• 'மரோசரித்ரா'வில் சரிதா, கமல்.

A LITTLE OF GRACE
A LITTLE OF EASE
A LITTLE OF SPARK
AND A GOOD CHUNK OF
CLAY IS ALL WHAT
I WANT IN A NEW FACE.

ஒரு ஆங்கிலப் பத்திரிகைக்கு நான் கொடுத்த பேட்டியிலிருந்து -

அபிலாஷா!

வடமொழியில் ஒரு அழகிய பெயர்.

எத்தனை அபிலாஷைகளைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறார் இவர்!

படம் - 'மரோசரித்ரா'-

விசாகப்பட்டினத்திலே வெளிப்புறப் படப்பிடிப்பிற்கு நான் குறித்தாகி விட்டது. பாடல்கள் அத்தனையும் பதிவாகிக் கொண்டிருந்த நேரம். கதாநாயகன் கமலஹாசன். கதாநாயகி மிகப் பெரிய கேள்விக் குறி! யாரென்று இன்னும் முடிவாகாத நேரம்.

எண்ணற்ற புதுமுகங்களைப் பார்த்து, யாரையுமே கதாநாயகியாக ஒப்பந்தம் செய்ய முடியாமல் அலுத்து சலித்த நிலையில் தான், நண்பர் கணேஷ் பாத்ரோ அவர்கள் (எனது தெலுங்குப் பட வசனகர்த்தா) பதினாலு வயதே நிரம்பப் பெற்ற அந்த அபிலாஷாவை என் முன் நிறுத்தினார்.

கருமை - குட்டை, திருநீறு அணிந்த நெற்றியுடன் கூடிய சாந்தமான முகம். கருங்கச் சொல்லின் சினிமா பாணியே சற்றுமில்லாத ஒரு உருவம். கருமையில் ஓர் அலாதி அழகு என்பார்களே - அப்படித் தான் அந்த அபிலாஷா எனக்குக் காட்சி அளித்தார்.

'இனம்புரியாத ஒரு கவர்ச்சியும், ஈர்ப்பும் அந்த முகத்தில் விரவி இருந்ததையும், துருதுருவென்றிருந்த அந்தக் கண்களிலே அசாத்யமான தன்னம்பிக்கை குடிகொண்டிருந்ததையும் என்னால் அடையாளம் கண்டுகொள்ள முடிந்தது.

வழக்கமாக சந்தர்ப்பம் கேட்டு வருபவர்கள் எல்லோரும் ஒருவித பீதி கலந்த பார்வையோடு மிரள மிரள விழித்துக் கொண்டிருப்பதைத்தான் கண்டிருக்கிறேன். இவர் சுற்றியுள்ள யாரையும் பற்றி சற்று கூடக் கவலைப் பட்டதாகவே தெரியவில்லை. அதிலும் முக்கியமாக என்னைப் பார்த்து கொஞ்சம் கூடப் பயப்படவேயில்லை! நான் யாரென்று அவருக்குத் தெரியவுமில்லை! 'நீ யாராயிருந்தாலென்ன' என்கிற மாதிரியே ஒரு பார்வை!

கேட்ட கேள்விகளுக்கு மட்டும் 'கணீர் கணீர்' என்று ஒரு பதில். இதுவும் நூற்றோடு நூற்று ஒன்றுதான் என்று கூடியிருந்த மற்றவர்கள் அலட்சியப் பார்வையோடு இருக்க, அவர் பார்த்து ரசித்த ஏதாவதொரு சினிமாப் பாடலைப் பாடியபடியே நடித்துக் காட்ட முடியுமா என்று சொன்னதுதான் தாமதம், ஒரு தெலுங்குப் படத்தில் ரோஜாரமணி பாடி நடித்த பாடலை, நின்று, நடந்து, தரையில் உருண்டு புரண்டு, மறுபடி எழுந்து, ஜன்னலிடம் சென்று கம்பிகளைப் பிடித்துக் கொண்டு பாடி நடித்துக் காட்டினார்.

ஏதோ 'எக்ஸர்ஸைஸ்' செய்து முடித்ததைப் போன்ற மனநிறைவு அவர் முகத்தில் தெரிந்த அதே நேரத்தில் கூடியிருந்த பலரும் 'கொல்'லென்று சிரித்ததும், அவரது முகத்தில் கலவரம் படியத் தொடங்கியது. பார்த்தவர்கள்தான் வெட்கத்தில் சிரித்தார்கள். ஆனால் அவர் வெட்கப்படவில்லை.

"ஏன் சார் எல்லோரும் சிரிக்கறீங்க?" என்று ஒரு மாதிரியாகக் கேட்டார். "நீங்கள்தானே நடித்துக் காட்டச் சொன்னீர்கள்? இப்போது சிரித்தால் என்ன அர்த்தம்?" என்று கேட்பது போலிருந்தது. இந்தப் பெண்ணின் துடிப்புமிக்க நடவடிக்கையே எனக்குள் பெரிய நம்பிக்கையை வரவழைத்தது; கூடவே கூடியிருந்தவர்களுக்கு ஒரு சந்தேகமும் எழுந்தது.

கதாநாயகிக்கு முக்கியத்துவம் தரக்கூடிய ஓர் அழுத்தமான கதாபாத்திரத்தை இந்த இளம்பெண் தாங்குவாளா? அல்லது அதன் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ளவாவது முடியுமா? என்ற கேள்விகள் எங்களுக்குள்ளே ஊற்றெடுத்தாலும், அதில் நான் மூழ்கி விடவில்லை!

கே. பாலசந்தர்

# நினைவலைகள்

18

காரணம் - இந்தப் பெண்ணின் அசாத்திய துணிச்சலும், தன்னம்பிக்கையும், நடிக்க வேண்டுமென்ற ஆர்வமும்தான்!

எல்லாவற்றிற்கும் மேலாக, அவர் என்னைக் கண்டு சற்றும் பயப்படாத அந்த இளம்கன்றுத்தனம் என்னை மிகவும் கவர்ந்தது.

பிறகு சொல்லி அனுப்புவதாக அவரை அனுப்பி விட்டு, நான் தயாரிப்பாளர் அரங்கண்ணலைப் பார்க்கிறேன்.

"இவளையே போட்டுப் பார்ப்போமா பாலு?" என்கிறார் அவர்.

"இனி பார்ப்பதற்கொன்றுமில்லை! அபிலாஷாவை ஸ்வப்னா ('மரோசரித்ரா' கதாநாயகியின் பெயர்)வாக ஆக்கி விட்டேன்" என்று நான் சொல்கிறேன்.

அன்று மாலையே அவரை மீண்டும் வரவழைத்து கறுப்பு வெள்ளையில் சில ஸ்டில்கள் மட்டும் எடுக்க ஏற்பாடுகள் செய்தேன்.

"உனக்கு என்ன பெயர் வைக்கலாம்?" என்று கேட்டேன்.

"ஏன் சார்! எனக்குத்தான் ஒரு பெயர் இருக்கிறதே! அந்தப் பெயருக்கென்ன?" என்று திருப்பிக் கேட்டார். இவருடைய இந்த பதில் கேள்வியை யாரும் எதிர்பார்க்கவில்லை. மற்றவர்கள் ரசிக்கவுமில்லை.

"நீங்கள் என் பெயரை மாற்ற வேண்டுமென்று நினைத்தால் என் பெயருடன் 'ஜெய்' சேர்த்துக் கொள்ளுங்களேன்" என்றார்.

"ஜெய்அபிலாஷாவா?"

சாதாரணமாக இது அதிகப்பிரசங்கித்தனமாகத் தான் தோன்றியிருக்கும். ஆனால் எனக்கு அதிலே கல்மிஷம் தோன்றவில்லை. innocenceதான் தெரிந்தது.

"சுருக்கமாகக் கூப்பிடக்கூடிய பெயராகவும், ஜனரஞ்சகமான ஒரு பெயராகவும் உனக்கிருப்பது ஒருவேளை நீ பெரிய நடிகையாகி விட்டால் உனக்கு நல்லது" என்று நான் சொன்னதும் "சரி சார்! உங்களிஷ்டம்" என்று சொன்னார்.

தமிழில் வெளிவந்த 'அவள் ஒரு தொடர்கதை', தெலுங்கிலும் 'அந்துலேனி கதா' என்ற பெயரில் நானே இயக்கி மிகப் பெரிய வெற்றி பெற்றது. சுஜாதா தமிழில் நடித்த அந்த கவிதா என்ற கதாநாயகியின் பாத்திரம், தெலுங்குத் திரைப்படத்தில் 'சரிதா' என்ற பெயரோடு வந்திருந்தது.

அந்தப் பாத்திரத்தில் ஜெயப்ரதா நடித்து 'சரிதா' என்ற அந்தப் பெயர் ஆந்திர ராஜ்யமெங்கும் மிகப் பெரிய புகழ் பெற்றது. அந்தக் கதாபாத்திரத்தின் பெயரையே இந்தப் புதுமுகத்திற்கு வைப்பதாக முடிவு பண்ணி அபிலாஷாவை நான் 'சரிதா'வாக மாற்றினேன்.

திரையுலக சரிதாவின் சரித்திரத்திற்கு 'மரோசரித்ரா' அஸ்திவாரமாக அமைந்து விட்டது உங்களுக்குத் தெரிந்த விஷயம் தானே!

அனைவரும் விசாகப்பட்டினம் போய்ச் சேர்ந்தோம். ஏறத்தாழ நாற்பது நாட்கள் தொடர்ந்து படப்பிடிப்பு நடத்தத் திட்டமிட்டிருந்தோம்.

கடற்கரை பின்னணியில் முதல் நாள் படப்பிடிப்பு! சரிதா சைக்கிளில் வருவார்; கமலஹாசன் மோட்டார் சைக்கிளில் வருவார்! கமலைப் பார்த்ததும் சைக்கிளிலிருந்து இறங்கி வந்து அவரது கையில் சரிதா முத்தமிட வேண்டும்!

செய்ய வேண்டியதை மூன்று நான்கு முறை சொல்லி விட்டேன். செய்து காட்டி விட்டேன். படத்தின் முதல் ஷாட் எப்பொழுதும் முதல் டேக்கிலேயே ஓ.கே.யாகி விட வேண்டுமென்று நினைப்பவன் நான்.

சரிதாவின் முகத்திலே ஒரு inconvenient feeling - பயம். நடையிலே ஒரு செயற்கைத்தனம். பலமுறை ஒத்திகைகள் பார்த்தேன். எனது அடிவயிற்றிலே ஒரு பீதி கிளம்ப ஆரம்பித்தது. இயற்கையாகச் செய்ய அவளுக்கு வரவேயில்லை. வெயிலோ கொளுத்துகிறது.

அதுவும் விசாகப்பட்டினத்து

வெயில், கொடுமைக்குப் பெயர் போனது. உள்ளுக்குள்ளே பொறுமையை இழந்து கொண்டிருந்தாலும், பொறுமை இழக்காதவன் மாதிரி நான் நடந்து கொள்கிறேன். இந்த மாதிரி நேரங்களில் பொறுமை இழந்து சொல்லும் எந்த வார்த்தையும் புதுமுக நடிகர்களை இன்னும் பாதிக்குமே தவிர அதனால் நமக்குப் பலன் கிட்டாது.

திரும்பத் திரும்பச் சொல்லிப் பார்க்கிறேன். "சாதாரணமா நடந்து வா!" என்றெல்லாம் ஊக்குவிக்கிறேன் - பலன் இல்லை.

"விஷப் பரீட்சை செய்து விட்டேனோ?" என்று எனக்குள்ளே வினா எழுப்பிக் கொள்கிறேன். சாதாரணமாக நடந்து வரக் கூடத் தெரியவில்லையே. இவளை வைத்துக் கொண்டு இந்த ஆழமான சோகக் காதல் கதையை எப்படி எடுத்து முடிக்கப் போகிறேன்?"

வியர்த்துக் கொட்டுகிறது. வெயிலின் கடுமை ஒரு பக்கம். இன்னமும் முதல் ஷாட் எடுத்து முடித்தாகவில்லையே என்ற பயமும் பீதியும் இன்னொரு பக்கம்.

தயாரிப்பாளர் திரு. அரங்கண்ணல் என்னையே பார்க்கிறார். வேடிக்கை பார்க்க வந்த கூட்டம் என்னையே பார்க்கிறது. எல்லோரது பார்வையும் என் மீதே பதிந்தது. எனது உதவியாளர்கள் என்னைப் பார்க்கவே அஞ்சிக் கொண்டு முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொள்கிறார்கள்.

'கமல்' மட்டும் என்னை அனுதாபத்தோடு பார்க்கிறார்.

ஒருவழியாக அன்றைய படப்பிடிப்பை ஏனோதானோ என்று முடித்துக் கொள்கிறேன். என் கண்முன்னே அசாத்திய துணிச்சலுடன் மிகச் சிறப்பாக நடிக்கிறோம் என்கின்ற எண்ணம் இல்லாமலே அன்று நடித்துக் காட்டிய அந்த அபிலாஷா எங்கே - இன்று அத்தனை பேரையும் ஏமாற்றத்திற்குள்ளாக்கிய இந்த சரிதா எங்கே?

அன்றைய படப்பிடிப்பு முடிந்ததும் கமல் கூட எனது உதவியாளர் அனந்துவிடம், "நம்ம டைரக்டர் என்ன சார், இப்படியொரு பெரிய மிஸ்டேக் பண்ணி விட்டார்?"என்று அங்கலாய்த்தாராம்.

எனது முகத்தில் அன்று பூராவும் ஈயாடவில்லை. தயாரிப்பாளர் என்னை வந்து பார்க்க பயப்படுகிறார். நான் அவரைப் பார்க்கக் கூச்சப்படுகிறேன்.

ஆனால் நம்பிக்கையை மட்டும் நான் இழக்கவில்லை. முதல் நாள் படப்பிடிப்பு என்கிற பயம், வெயிலின் தகிப்பு, பார்வையாளர்களின் கூட்டம், கண்களைக் கூச வைக்கும் ரிஃப்ளக்டர்களின் வெளிச்சம் எல்லாமாகச் சேர்ந்து ஒரு புதுமுகத்தை பயமுறுத்தியிருப்பது இயற்கைதானே!

தொடர்ந்து படப்பிடிப்பை நடத்துகிறோமா அல்லது வேறு எந்தப் பெண்ணையாவது உடனே சென்னையிலிருந்து வரவழைத்து நடிக்க வைப்பதா? அதுவரை சும்மா இருப்பதா? என்றெல்லாம் கேள்விகள். எண்ணங்கள். தயாரிப்பாளர் அரங்கண்ணல் அவர்கள் மிக நிதானமாகக் காணப்பட்டார்.

"நீ என்ன முடிவெடுத்தாலும் ஓ.கே. பாலு!" என்று தீர்மானமாகச் சொல்லி விட்டார். கொஞ்சம் கூட பதட்டமேயில்லாமல், நான் முடியைப் பிய்த்துக் கொண்டேன்.

மறுநாள் படப்பிடிப்பைத் தொடருவதாக முடிவெடுத்தேன். அதே விசாகப்பட்டினம் கடற்கரை - ஒரு காதல் காட்சி.

மணலிலே தெலுங்கு எழுத்துக்களை எழுதி தன் காதலை நாயகி வெளிப்படுத்தும் காட்சி.

படப்பிடிப்பு தொடங்குகிறது. எல்லோரும் உதட்டைப் பிதுக்கிக் கொண்டு நம்பிக்கையே இல்லாமல் பணிபுரிகிறார்கள்.

காட்சியைச் சொல்லிக் கொடுக்கிறேன். தெலுங்கு வசனத்தை உதவியாளர் சொல்கிறார். ஒரு ஒத்திகை பார்க்கிறேன். எல்லோரது பார்வையும் இப்போது சரிதாவின் மீது!

முதல் நாள் படப்பிடிப்பில் சரிதா வாங்கிய மார்க் பூஜ்யம்.

இரண்டாவது நாள் இன்று. ஒரே ஒரு ஒத்திகை. சரிதா வாங்கும் மார்க் எண்பது. எல்லோரது கண்களும் அகல விரிகின்றன. கமல் உள்பட! அரங்கண்ணல் உள்பட! ஆனால் மூன்றாவது நாள்?

சில புதுமுகங்கள் படம் முழுதும் உயிரை எடுப்பார்கள். சிலர் 'பரவாயில்லை' என்று நினைக்க வைப்பார்கள்.

சிலர் முதல் படத்தில் promising ஆக இருப்பார்கள். அடுத்த படத்தில் அபரிமிதமான வளர்ச்சி பெற்று நமக்கே inspiration ஆக அமைவார்கள்.

ஆனால் சரிதா...!

மூன்றாவது நாள் படப்பிடிப்பிலேயே கமலுக்கு ஈடுகொடுக்க ஆரம்பித்தார்.

சரிதாவை அறிமுகம் செய்த மரோ சரித்ரா சரித்திரம் படைத்தது.

சென்னை சபையர் தியேட்டரில் காலைக் காட்சியாக மட்டும் தொடர்ந்து 600 நாட்கள் ஓடியது.

கோவை ராயல் தியேட்டரில் ஒரு தெலுங்குப் படம் காலைக் காட்சியாக 203 நாட்கள் ஓடியது.

பெங்களூரில் மரோசரித்ரா ஓடிக் கொண்டிருந்த போது ரிடையர் ஆன தபால் இலாகா அதிகாரி ஒருவர் தொடர்ந்து 280 தடவை இந்தப் படத்தைப் பார்த்து வந்திருக்கிறார்.

தமிழ்த் திரையுலகில் காதல் காவியங்கள் தொடர்ந்து வருவதற்கு அடிகோலியது இந்த மரோசரித்ராதான்.

(தொடரும்)

படம் உதவி : **பிலிம் நியூஸ் ஆனந்தன்**

## டாக்டர் பேசுகிறார்




# பெண்ணுக்குத் திருமணமா? 'Rh' பொருத்தம் பார்த்தாச்சா?

"பாவம் கமலா! இரண்டாவதா ஆண் குழந்தை பிறந்து உடனேயே இறந்துடுச்சு. ஏதோ ஓர் ஆர். எச். கோளாறுங்கறாங்களே டாக்டர். அது யாருக்கு வேணுமானாலும் வருமா?" கலவரம் படர்ந்த முகத்துடன் கேட்ட பேஷன்டுக்கு விளக்கி, தைரியம் சொல்லி அனுப்பினேன்.

Rh என்கிறதே ஒரு வகை கோளாறு என்று நினைச்சுட வேண்டாம். நமது இரத்தத்தில் இருக்கிற ஒருவகை antigenக்குத்தான் அந்தப் பெயர் (antigen = புற தாக்குதலிலிருந்து காக்கும் எதிர்ப்பணு). Rhesus monkey என்று அழைக்கப்படும் சாதாரண குரங்கின் இரத்தத்தில்தான் இந்த antigen முதன் முதலில் கண்டுபிடிக்கப்பட்டது. எனவே நம் மூதாதையர் நினைவாக இதற்கு 'Rh' என்று பெயர்.

பொதுவாக எல்லாருடைய ரத்தத்திலயும் Rh எதிர்ப்பணு இருக்கும். இந்த Rh கலப்பு இல்லாத ரத்தம் உலகத்தில் சுமார் பதினஞ்சு சதவிகிதம் பேரின் உடலில் ஓடிக்கிட்டிருக்கு. நம்ம பிளட் குருப்பை, A, B, O, AB ன்னு எல்லாம் பிரிக்கிறாங்க இல்லையா... அப்ப, கூடவே Rh எதிர்ப்பணு இருக்கா என்றும் சோதிச்சுடலாம். அது உள்ளவங்களுக்கு, ரத்த குருப்புடன் 'பாஸிடிவ்' அடைமொழி கொடுக்கப்படும். Rh எதிர்ப்பணு இல்லாதவங்களுக்கு ரத்த குருப் பெயருடன் 'நெகடிவ்' அடைமொழி.

சாதாரணமா வாழ்க்கை நடத்தும் போது நெகடிவ்காரங்களுக்கு ஒரு பிரச்னையும் இருக்காது. ஆனா அவங்க சில விஷயங்கள்ல எச்சரிக்கையா இருக்கணும்.

இவங்களுக்கு ஏதாவது வகையில் ரத்த இழப்பு உண்டாகி, ரத்தம் ஏற்ற நேர்ந்துன்னா தப்பித் தவறி கூட Rh பாஸிடிவ் ரத்த வகையை ஏற்றி விடக் கூடாது. அப்படிச் செய்தால் Rh antibodies என்ற எதிர்பொருள் இவங்க உடல்ல உருவாகி பெருக ஆரம்பிச்சுடும். இந்த நிலையில இன்னுமொரு முறை இவங்களுக்கு ரத்தம் குடுக்க வேண்டி வருதுன்னு வைச்சுக்குவோம்... அப்போ, முதலில் நடந்த தவறு தெரியாமல் மீண்டும் Rh பாஸிடிவ் வகையையே ஏற்றினால் மீண்டும் எதிர்பொருள் உருவாகி, முன் உருவானதோடு மோதி, ரத்தத்தில் சிவப்பணுக்களை அழிக்க ஆரம்பிச்சுடும். இதன் விளைவா ரத்த சோகை, மஞ்சள் காமாலை, சிறுநீரகக் கோளாறுன்னு பிரச்னை வளர்ந்து உயிருக்கே கூட ஆபத்து வரலாம்.

'சரி, குழந்தை பிறப்புக்கும் Rhக்கும் என்ன தொடர்பு?'ன்னு கேட்பீங்க. Rh நெகடிவ் பெண்ணுக்கும் Rh பாஸிடிவ் ஆணுக்கும் கல்யாணமாகிறதுன்னு வைச்சுக்குவோம். இவங்களுக்குப் பிறக்கற குழந்தை பாஸிடிவ்வாகவும் இருக்கலாம். நெகடிவ்வாகவும் இருக்கலாம். எந்த வகையானாலும் முதல் குழந்தை பிறப்பில் பிரச்னையிராது.

ஆனால் இரண்டாவது குழந்தை பிறக்கும் போது சீரியஸான பிரச்னை உருவாக வாய்ப்பு இருக்கு. எப்படி...? முதல் குழந்தை Rh நெகடிவ்வாக (அம்மாவைப் போலவே) இருந்து விட்டால் நோ பிராப்ளம். ஆனால் அது Rh பாஸிடிவ்வாக இருப்பின் அது பிறக்கும் போது, அம்மாவுடைய உடலிலும் அதன் பாஸிடிவ் ரத்தம் கலந்து போகும். எதிர்பொருளை உருவாக்க ஆரம்பிக்கும். பின்னர் இரண்டாவது குழந்தையைக் கரு

வரும் போது, அக் குழந்தை Rh பாஸிடிவ் வகையாக இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். கருவுக்கு, தாயின் ரத்தம் மூலமாகத்தானே ஆக்ஸிஜன் போகும்? அப்போது முதலில் சொன்ன எதிர்ப்பணுக்களும் சேர்ந்து கருவுக்கு சப்ளை ஆகும். ஏற்கெனவே Rh பாஸிடிவ் கருவில் உருவாகிக் கிட்டிருக்கும் எதிர்பொருளோடு மோதிரகளை செய்யும். சிவப்பணுக்கள் அழிய ஆரம்பிக்கும். ரத்தசோகை, மஞ்சள் காமாலை என்று வரிசையாக வதைத்துக் கருவை ரொம்பவும் பலவீனப்படுத்தி விடும். இதனால் குழந்தை உயிருடன் பிறக்காது போகலாம், அல்லது பிறந்ததும் இறந்து போகலாம்.

பிளட் குரூப்பை ஒரு தடவைக்கு இரண்டு தடவை சரிபார்த்துக்கறதைத் தவிர, வேறென்ன செய்ய முடியும் இந்தப் பிரச்னைக்குன்னு கேட்பீங்க...

அதையே பலர் ஒழுங்கா செய்துக்கறதில்லைங்கறதுதாங்க பெரிய சோகம்! அப்படியே பரிசோதனை செஞ்சுகிட்டாலும் தங்கள் குரூப்பை ஞாபகம் வைச்சுக்காம அலட்சியமா இருக்காங்க. இப்படியில்லாம கொஞ்சம் பொறுப்பா நடந்துக்கலாம். பெண்ணுக்கு Rh நெகடிவ் குரூப் இருந்தா அதே குரூப் ரத்தம் உடைய மாப்பிள்ளை பார்க்கலாம். ஜாதகப் பொருத்தம், மனப் பொருத்தம் பார்க்கிறதை எவ்வளவு சீரியஸா எடுத்துக்கறோம்! அதே சீரியஸ்னஸ் இதுலயும் தேவை.

'சரி, லவ் மர்ரேஜா இருந்துட்டா என்ன செய்யறது'ன்னு கேட்பீங்க! விடுங்க! பாஸிடிவ் - மாப்பிள்ளை நெகடிவ் பொண்ணுன்னு கலப்புத் திருமணமே நடந்தாலும் எச்சரிக்கையா, முதல் குழந்தை பிறந்ததுமே அதன் தொப்புள் கொடி ரத்தத்தைப் பரிசோதிச்சுப் பார்க்கணும். குழந்தை பாசிடிவா இருந்தால் அம்மாவுக்கு Anti-D என்கிற விலையுயர்ந்த இஞ்ஜெக்ஷனைப் போடணும். பிரசவமான இரண்டு மூணு நாள்ல இதைப் போட்டுட்டா அடுத்த குழந்தைக்குப் பிரச்னை இருக்காது.

என்ன, இலேசா தலைசுத்துதா...? பின்ன என்னங்க, 'ரத்தத்தின் ரத்தம்'னா சும்மாவா..!

— டாக்டர் பாலகுமாரி

தொகுப்பு : நிர்மலா சக்ரவர்த்தி

# நினைத்ததை வெல்ல - நீடிய ஆயுள்பெற
# ஆழ்நிலை தியானம்
# தபால் வழி போதனா முறை

நினைத்ததைச் சாதிக்கவும் - நீடிய ஆயுட்காலம் வாழவும், நோய் நொடியே வராது தடுக்கவும், வந்த வியாதி எதுவாக இருப்பினும் எடுத்தெறிந்து ஆரோக்கிய மேன்மை பெறவும் - அன்றையக் கால அருந்தவ முனிவர்கள் தேவ இரகஸியமாக இருந்துவந்த 'ஜீவசுத்தி' என்ற பயிற்சியினை மேற்கொண்டனர். அன்றைய நாளிலேயே தேவ இரகஸியம் என மூடி வைத்த கலையிதை - இன்றைய நாளில் வெகுவாய் எவரும் கற்றவர் இல்லையெனலாம். நிச்சயமாக நிறைவான ஆயுளைத் தரும் பயிற்சி இது. சிறுவர் செய்யின் கால முழுவதும் நோயே வராது - கலையில், கல்வியின் வல்லவராவார் - காசினி காக்கும் தலைவராவார் - சற்புத்திரராய்ப் பெற்றோரைக் காத்து பெருமையைச் சேர்ப்பார் - பெண் பயிற்சி செய்தால் பெருமைக்குரிய கணவனைச் சேர்வாள் - வேதனையின்றி பிரசவமாகும் - சற்புத்திரரைப் பெற்றெடுப்பாள் - காலம் முழுவதும் கணவனைப் பிரியாது சுகித்து வாழ்வாள் - ஓர் ஆடவர் செய்வாராகில் - அரசனென வாழ்வார் - எவ்வித வியாதியுமே வராது - எவ்வியாதி பற்றி இருந்தாலும் பறந்தோடிப் போகும் - பணபலம் பெறுவார் - பகைவரே இரார் - தொழில் வழியில் அபரிமித இலாபம் அடைவார், எண்ணிய காரியங்கள் எதுவாயினும் வெற்றி அடைந்தே தீருவார்.

எந்நோய் கண்டாரும் - இதனை மேற்கொண்டால் - அந்நோய்ப் பிடியில் இருந்து நிச்சயம் விலகிடுவார் - மிக எளிதான பயிற்சி முறை - ஏற்றதான நலங்கள் - இது வெறும் வார்த்தைக்கு யாம் சொல்லவில்லை. தேவ இரகஸியம் எனப்படும் இதனைக் கைக்கொண்டால் - நோயற்ற நிலை; நீடிய ஆயுள் - நிறைவான செல்வசுகம் - நிலையான கெளவரம் - நிச்சயம் கிடைக்கும். இதனை செய்துதான் அன்றைய தபசிகள் - அரசனும் வணங்கிடும் அரிய நிலை - ஆண்டாண்டுக் காலமாக வாழும் ஆயுள் பலம் - ஆபத்தே நீண்டாத அற்புத ஜீவிதம் பெற்றனர். அரிய வாய்ப்பு - இனி இதுபோன்று இந்த இரகசியத்தைச் சொல்வார் உதிக்க மாட்டார். இம்முறையைத் தெரிந்தவர்களும் இருக்க மாட்டார். ஆழ்நிலை தியானம் பாடத்தில் 'ஜீவசுத்தி' பயிற்சி பற்றி ஆழமாக விவரிக்கப்பட்டு இருக்கின்றது. கற்றிடுங்கள் - அதிசய நலத்தை உறுதியாகப் பெற்றிடுவீர்கள் - விரும்புவோர் - விவரம் முழுமையாக அறியத் தெளிவான விலாசம் எழுது எமக்கு 10.1.1995 தேதிக்குள் மனுச் செய்து கொள்ளுங்கள். விவர படிவம் யாம் அனுப்புகின்றோம். செய்யத் துவங்கிய 90 நாட்களிலேயே ஓர் அதிசய நிலையைக் காண்பீர்கள்.



பிரபல ஜோதிடர் : ஜோதிட ஆசிரியர்,

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா, யோகி,**

இராஜயோகப் பயிற்சியாளர்.

பிளாட் எண் : 204, அண்ணாநகர்,

மதுரை - 625 020.

தொலைபேசி : 43412; 46634.

**மா**ணிக்லால் திங்ராவின் மூக்கிலிருந்து இரத்தம் ஒழுகத் தொடங்கியது. ஜெய்சங்கர் சுக்லா காரணமில்லாமல் அவனை அடிக்க மாட்டானென்பதால் ராஜ்குமாரும் ரத்னாகரும் தடுக்காமல் - ஆனால் திகைப்புடன் - பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இரத்தத்தைப் பார்த்ததும் அவனிடம் தனது கைக்குட்டையைக் கொடுத்த ஜெய்சங்கர் சுக்லா, "நண்பர்களே, இவன் நம்மில் தீவிரவாதிகள் பற்றிப் போலீசுக்குத் தகவல் சொல்லி விட்டு அவர்களது வருகையை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான்... அடேய், மாணிக்லால், 'இன்னும் ஒரு விஷயம்' என்று ஏதோ சொல்லத் தொடங்கினாயே, அது என்ன? மரியாதையாகச் சொல்லிவிடு. இல்லாவிட்டால் அடிபட்டே சாவாய்" என்றான் மிரட்டலாக.

மாணிக்லால் திங்ரா தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டிருக்கையில், நடந்ததை நண்பர்களுக்குச் சொன்னான். "பாதியில் நான் தொலை பேசித் தொடர்பை வெட்டி விட்டதால் எப்படியும் போலீசார் உன்னை அது பற்றியும் கேட்பார்கள். நீ என்ன சொல்லப் போகிறாய்?"

மூக்கை உறிஞ்சிக் கொண்டே, "லைன் கட்டாகிவிட்டதென்று சொல்லுவேன்..." என்றான்.

"இன்னொரு விஷயம் என்று ஏதோ சொல்லத் தொடங்கினாயே, அது என்ன?"

"இந்தியா ஹவுசின் ஆங்கிலேய வாட்ச்மேனே உங்களுக்கு உடந்தை என்பதைத் தெரிவிக்க நினைத்தேன்...."

# மணிக்கொடி

"அட துரோகிப் பயலே! இனி ஒவ்வொரு கணமும் எங்கள் கூட்டம் உன்னைக் கண்காணிக்கும். ஒரு சிறு சந்தேகம் ஏற்பட்டாலும் உன் உயிருக்கு ஆபத்து. மறக்காதே!"



"என்னை மன்னித்து விடுங்கள்." - மாணிக்லால் திங்ரா உதடுகள் துடிக்கப் பேசினான்.

"போலீஸ் இங்கு வருவதற்கு முன்னால் நீ வெளியே போய் விட வேண்டும். அடிபட்ட, வீங்கிய முகத்துடன் நீ அவர்கள் பார்வையில் படக்கூடாது! சரி. நானே உன்னோடு வெளியே வருகிறேன். உன்னை நம்ப முடியாது" என்ற ஜெய்சங்கர் சுக்லா, அவனை இழுத்துக் கொண்டு வெளியேறினான்.

**ஜோதிர்லதா கிரிஜா**

முன்னெச்சரிக்கையின் விளைவாக விடுதி மாணவர்கள் ஆவன செய்து விட்டதால் சற்றுப் பொறுத்து வந்து சேர்ந்த காவல் துறை ஊழியர்களுக்கு இங்கிலாந்து அரசுக்கு எதிரான பயங்கரவாத நடவடிக்கைக்கான எந்தத் துப்பும் கிடைக்கவில்லை.

விடுதியையே தலை கீழாகப் புரட்டிவிட்டு அவர்கள் போனதும் மாணவர்கள் நிம்மதியாய்ப் பெருமூச்செறிந்தனர்.

**நா**ட்கள் ஓடிக் கொண்டிருந்தன. குறித்த காலத்தில் குஞ்சம்மா கங்காதரனைப் போன்றே ஓர் அழகான ஆண்குழந்தையைப் பெற்று விட்டுத் தனக்கு என்ன குழந்தை



## அடுத்த இதழில்.....

- **போலிச் சாமியார்களால் ஆன்மிகத்துக்கு ஆபத்து...?**
- **ஒரு பிளாட்பாரச் சிறுவனின் நிஜமான கதை!**

பிறந்தது என்பதைத் தெரிந்து கொள்ளு முன்னரே இறந்து போனாள்.

ராமசாமிக்குக் குஞ்சம்மாவின் மரணம் பற்றிய நம்பிக்கையே வரவில்லை. மொட்டை மாடியில் பழைய நிகழ்ச்சிகளையெல்லாம் அசை போட்ட வண்ணம் ஈஸிசேரில் ஆகாயத்தை வெறித்தபடி மல்லாந்து படுத்திருந்தார். அவர் செவிகளில் கீழே இருந்து கிளம்பி வந்த சின்னஞ்சிறு குழந்தையின் அழுகுரலும் தமக்கை விசாலத்தின் சமாதானக் குரலும் புகுந்து நடந்து விட்டது உண்மைதான் என்பதை அவருக்கு உணர்த்திக் கொண்டிருந்தன.

கொஞ்சம் விவரந் தெரிந்த கங்காதரனை யாராலும் சமாதானப்படுத்த முடியாமல் போயிற்று. 'அம்மா சாமிகிட்ட போயிட்டா' என்ற கூற்றை ஏற்க அவன் தயாராக இல்லை. 'அப்படின்னா அது பொல்லாத சாமி. கெட்ட சாமி. இனிமே நான் சாமிக்கு நமஸ்காரம் பண்ணவே மாட்டேன்' என்று ஆத்திரமாகக் குழந்தை அறிவித்த போது ராமசாமி மலைத்துப் போனார்.

அந்தக் காலத்து நாத்தனார்களுக்கு ஒரு விதி விலக்காய் ஒரு மூத்த சகோதரி போன்று குஞ்சம்மாவுடன் பழகி வந்த விசாலமோ ஒரே வாரத்தில் பாதி உடம்பாகிவிட்டாள்.

குஞ்சம்மாவின் இறுதிச் சடங்கின் போது ராஜா ராமனும் அஞ்சனாவும் வந்தனர். அஞ்சனா வந்தது முதல் திரும்பிப் போகும் வரை கண்ணீரைத் துடைத்தபடியே இருந்தது அவரை வியப்பில் ஆழ்த்தியது. அவள் தம்மோடு பேசிப் பழகுவதைத் தடுக்கக் கோரிக் குஞ்சம்மா ராஜாராமனைச் சந்தித்த சேதி அவளுக்குத் தெரிந்திருக்குமா என்பதைப் பற்றி அவரால் ஊகிக்க முடியவில்லை.

**கொ**ஞ்ச நாட்கள் கழித்து விசாலம் அவரது திருமணப் பேச்சை எடுத்தாள். அவளது எண்ணம் வெளிப்பட்ட மாத்திரத்தில் அவர் பொசுக்கி விடுகிறாற்போல் அவளைப் பார்த்தார்.

"இப்ப இல்லேடாப்பா. இன்னும் ஒரு வருஷம் கழிச்சுத்தான். அப்படிப் பார்க்காதே" என்று விசாலம் குழறினாள்.

"இந்தப் பேச்சையே நீ இனிமே எடுக்கக் கூடாதுக்கா. எத்தனை வருஷங்கழிச்சானாலும் சரிதான். குஞ்சம்மா இருந்த இடத்துல வேற யாருக்கும் இடம் கிடையாது. இனிமே நான் முழு மூச்சோட தேச சேவையில ஈடுபடப் போறேன்."

விசாலம் பதில் சொல்லவில்லை. கொஞ்ச நேரம் மவுனத்தில் கழிந்த பிறகு, "ராமசாமி, தயவு செஞ்சு கோவிச்சுக்காம நான் சொல்றதைக் கேளு. உனக்குச் சின்ன வயசுதான். நீ மறுகல்யாணம் பண்ணிண்டுதான் ஆகணும். அந்தப் பொண்ணு அஞ்சனா அடிக்கடி இங்க வறா. அவளைக்கூட நீ பண்ணிக்கலாம். நீ சரின்னு சொன்னா நான் அவளைக் கேட்டுப் பார்க்கறேன்" என்றாள் பயந்தபடி. ஆனால் பார்வை மட்டும் நீட்சியாக அவர் மீது படிந்திருந்தது.

ராமசாமி, அறை வாங்கியவர் போல் விழிகள் விரிய அவளை ஏறிட்டு, "பயித்தியக் காரத்தனமா பேசாதே அக்கா! எனக்குக் கோபம் வரும்! அதுசரி, அந்தப் பெண் அடிக்கடி இங்க வராளா என்ன?"

"ஆமாண்டா, வறா. உன் குழந்தைகளை ரொம்ப நேரம் கொஞ்சிட்டுப் போறா. கங்காதரன் அவகிட்ட பிசினாட்டமா ஒட்டிண்டுட்டான்."

"இதபாருக்கா, நீ பாட்டுக்கு அவகிட்ட எதையாவது பேத்தி வைக்காதே. குஞ்சம்மா இடத்துல வேற எவளையும் என்னால நினைச்சே பார்க்க முடியாது. தெரிஞ்சுதா?" ராமசாமியின் குரல் இரைந்து வெளிப்பட்டது.

**ஒ**ரு கட்டத்தில் நரேந்திரநாத், அமராவதி, அஞ்சனா ஆகிய மூவரும் மொட்டை மாடியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த போது, அவன் அஞ்சனாவிடம் தாங்கள் இருவரும் காதலிப்பது பற்றி வெட்கப்பட்டுக் கொண்டே தெரிவித்து விட்டான். அஞ்சனாவுக்கு உண்மையில் அது பேரின்ப அதிர்ச்சியாகத்தான் இருந்தது.

"அமராவதி காதல் வயப்பட்டிருப்பதாக நான் ஓரளவுக்கு ஊகிச்சேன், ஆனா அது நீங்கன்னு எனக்குத் தெரியல்லே, நரேன். சாமர்த்தியமாத்தான் இருந்து வந்திருக்கேள்

ரெண்டு பேரும்."

"ஆமாம் அஞ்சனா, இப்போதைக்கு உங்கம்மாவுக்கு இது தெரியவே கூடாது. சமயம் வரும் போது சொல்லிக்கலாம். அந்த நேரத்துல உங்க சிபாரிசு எங்களுக்கு ரொம்பத் தேவையா இருக்கும். உதவி செய்வேளில்லையா?" என்று கேட்டுச் சிரித்த அவனை ஒரு புதிய பாசத்துடன் அஞ்சனா நோக்கினாள்.

அப்போது பாமா அங்கு வந்தாள். நடையில் ஒரு பரபரப்பு இருந்தது. மூச்சு வாங்கியதில் அவள் உணர்ச்சிவயப்பட்டிருந்ததும் தெரிந்தது.

"நரேந்திரநாத் பானர்ஜி இங்கு இருக்கிறானா அப்படின்னு இங்கிலீஷ்ல கேட்டுண்டு ஒருத்தன் வந்திருக்கான். வடக்கத்திக்காரனாட்டமா இருக்கு. எனக்கு இங்கிலீஷ் தெரியாத மாதிரி, 'இரு இரு'ன்னு ஜாடையாலே பதில் சொல்லிட்டு வந்திருக்கேன். திண்ணையில உக்காந்திண்டிருக்கான். சி.ஐ.டி. கூட இது மாதிரி வரலாமில்லியா? அதனால நீங்க யாராவது போய்ப் பார்த்து ஜாக்கிரதையா விசாரியுங்கடி."

"ஒண்ணு பண்ணுங்க, நரேன். நானும் அமராவதியும் போய்ப் பேசறோம். நீங்க நைஸா ஜன்னல் வழியா எட்டிப் பார்த்து உங்க ஆள்தானான்னு கவனிங்க."

"அநேகமா எங்க ஆளாத்தான் இருக்கும், அஞ்சனா. முதமுத உங்க வீட்டுக்கு வந்தப்ப நான் இங்க வர்றதாச் சொல்லிட்டு அட்ரெஸ் குடுத்துட்டுத்தான் வந்தேன்."

நரேந்திரநாத் எழுந்தான். "அமராவதி! எங்க ஆளா இருந்தா விசில் அடிக்கிறேன். இல்லாட்டி, சமையற்கட்டுப் பரண்மேல ஏறிப் படுத்துடறேன். எதுக்கும், அம்மா, பரண்ல ஏறிக்கிறதுக்கு வசதியா அங்க ஒரு நாற்காலி போட்டு ரெடியா வையுங்கம்மா, ப்ளீஸ்...."

மூவரும் கலைந்து செல்ல, நரேந்திர நாத் திண்ணையை ஒட்டிய அறைச் சன்னல் வழியே மிகுந்த கவனத்துடன் பார்த்தான்.

# 32

"சார்! முத்துசாமி அய்யர்னு ஒருத்தருக்கு உங்களைப் பார்க்கணுமாம், சார்...."

"வரச்சொல்லு" என்று அனுமதித்து விட்டு ராஜாராமன் கதவின் புறமே பார்த்தபடி இருந்தார்.

கதவைத் திறந்து கொண்டு முத்துசாமி நுழைந்ததும், "வாப்பா, முத்து, எப்படி இருக்கே? லண்டன்லேருந்து எப்ப வந்தே?" என்றார்.

முத்துசாமி வெள்ளைக்காரன் நடத்தும் கம்பெனியில் ஓர் உயர்தர அதிகாரி. இந்திய சுதந்திரத்தைப் பற்றிய அக்கறை ஏதும் இல்லாதவர். வெள்ளைக்காரனே அனைத்துலக மக்களிலும் அறிவாளி, உலகத்தை ஆளப் படைக்கப்பட்டவன் என்பது அவருடைய அசைக்க முடியாத கருத்து. எனவே காங்கிரஸ் இயக்கம், தேசவிடுதலை போன்றவற்றை ராஜாராமன் அவருடன் விவாதிப்பதில்லை. ஆனாலும் முத்துசாமி தாமாகவே இவரை வம்புக்கு இழுத்து நன்றாக வாங்கிக் கட்டிக் கொண்டு போவார்.

"இந்தா உனக்குப் பிடிச்சது. ஓவல்டின் பிஸ்கட்ஸ். லண்டன்ல வாங்கினேன். பெட்டியைக் கண்டா எனக்கு உனக்குன்னு பிச்சுப் பிடுங்கிடுவா. அதனால பழைய லண்டன் நியூஸ் பேப்பர்ல பாக்கெட்டைச் சுத்தி எடுத்துண்டு வந்தேன்...." என்றவாறு அவர் கொடுத்த பொட்டலத்தை ராஜாராமன் நன்றி கூறிப் பெற்றுக் கொண்டார்.

"அப்புறம்? லண்டன்ல எம்பிள்ளை படிச்சிண்டிருக்கிறது ஞாபகம் இருக்கோல்லியோ?"

"இருக்குப்பா. ஆனாலும் டைட் ஷெட்யூல். அதனால இண்டியா ஹவுஸுக்குப் போக முடியல்லே...."

'நல்ல வேளை நீ போகாதது' என்று தமக்குள் நினைத்துக் கொண்டே ராஜாராமன்,

**"யோவ், ரௌடி ரெங்கன் என்னய்யா சொல்லிட்டுப் போறான்?"**

**"தன்னுடைய சுயசரிதை புத்தகமா வரப் போறதுன்னு மெரட்டிட்டுப் போறான் ஸார்!"**

**— கே.வி.**





பணத்தின் அருமை தெரிந்தவர்கள் நாங்கள்.

"பரவாயில்லேப்பா. அதனால என்ன?" என்றார்.

"இண்டியா ஹவுஸ்ல இண்டியன் டெர்ரரிஸ்ட்ஸ் சிலர் இருக்காப்ல இருக்கு. கொஞ்சம் கெடுபிடி பண்ணிண்டிருக்கான் வெள்ளைக்காரன்னு கேள்வி."

"அப்படியா? எனக்குத் தெரியாது. அருண் அதுபத்தி எதுவும் எழுதல்லே."

மேலும் சிறிது நேரம் பொதுவாகப் பேசிக் கொண்டிருந்த பிறகு முத்துசாமி விடை பெற்றார். 'பிஸ்கட் பொட்டலத்தைப் பிரிக்கும் போது அதைச் சுற்றிக் கொண்டு வந்த நாளிதழ் தாளிலும் கொஞ்சம் கவனம் செலுத்துப்பா. செய்தியை நேரடியா உன்னிடம் சொல்ல முடியாமத்தான் இந்த யுக்தியைக் கையாண்டேன்' என்று எண்ணிக் கொண்டே போனார்.

அவர் போன பிறகு ராஜாராமன் மேஜை மீதிருந்த பிஸ்கட் பொட்டலத்தை எடுத்துப் பிரித்தார். ஓவல்டின் பிஸ்கட் அவருக்கு ரொம்பப் பிடிக்கும். வீட்டுக்குப் போகும் வரை காத்திராமல் பொட்டலத்தைப் பிரிப்பதை எண்ணி சற்று வெட்கப்பட்டவாறு, ஓர் ஆர்வத்தில் லண்டனிலிருந்து வெளியான அந்தச் செய்தித்தாளைப் புரட்டினார். அதில் இருந்த செய்தி அவரைப் பேரதிர்ச்சிக்கு உள்ளாக்கியது. அப்படியே மேசைமீது தலையைக் கவிழ்த்துக் கொண்டு விம்மி விம்மிக் கண்ணீர் விடலானார்....

தள்ளாடியபடி உள்ளே நுழைந்த ராஜாராமனை அஞ்சனா, அமராவதி, நரேந்திரநாத் பானர்ஜி ஆகிய மூவருமே கலவரத்துடன் பார்த்தனர்.

"என்னப்பா ஒரு மாதிரி இருக்கேள்? உடம்பு சரி இல்லையா?" என்றவாறு சோபாவிலிருந்து இரண்டு பெண்களும் எழுந்தார்கள்.

"தலைவலிம்மா, டாக்டர் கிட்ட போயிட்டுத்தான் வரேன். அம்மாகிட்ட சொல்லிப் பெரிசுபடுத்தாதங்கோ, காப்பி குடிச்சா சரியாப் போயிடும், மாத்திரையும் சாப்பிட்டாச்சு...."

"அப்பா! இன்னிக்கு ஒரு முக்கியமான விஷயம் இருக்கு. நரேந்திரநாத் கிளம்பிப் போயிடப் போறார் - கல்கத்தாவுக்கு. இன்னிக்கு அவரோட ஃப்ரண்ட் ஒருத்தர் வந்திருந்தார். நாளைக்கே கிளம்பணுமாம். தோற்றத்தை மாத்திக்கிறதுக்கு வேற விதமான தாடி, மீசை, டோப்பால்லாம் கொண்டு வந்து குடுத்துட்டுப் போயிருக்கார்" என்றாள் அஞ்சனா பரபரப்புடன்.

(தொடரும்)

# சுயசரிதை

"**யோ**வ் சுப்பு! எனக்கு எல்லாம் தெரியுமய்யா... அந்த அம்பது லட்சம் விவகாரம் பத்தி நீ எழுதாம இருக்க மாட்டே... உனக்கு சேர வேண்டிய தொகையை அப்பவே பைசல் பண்ணியாச்சு. இன்னும் வேணும்னாலும் கேட்டு வாங்கிட்டுப் போ... அதை வுட்டுட்டு சுயசரிதை எழுதறேன் பேர் வழின்னு எதையாவது எழுதித் தொலைக்காதே. அப்புறம் நீயும் சேர்ந்துதான் கம்பி எண்ண வேண்டியிருக்கும், ஜாக்கிரதை!" நல்லசிவத்திடமிருந்து போன் மூலம் வந்த மிரட்டலை சுப்புசாமி லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை.

ஆளவந்தாரின் அணுகுமுறையே வேறு விதமாக இருந்தது. ஒரு பெரிய தட்டில் வெற்



திலை, பாக்கு, பழம், பூ என்று சமத்தாகக் கொண்டு சுப்புசாமியிடம் [illegible] பேச வந்து விட்டார். [illegible]

"என் முழு [illegible] பொண்ணை [illegible] பிள்ளைக்குக் கட்டிக் குடுத்திட்டேன்... நீ ஏதோ [illegible] எழுதப் போறதாக் கேள்விப்பட்டேன். ஏதோ வயசுக் கோளாறுலே உன் கூட சேர்ந்து நான் இப்படி அப்படின்னு பொம்பளைங்க விவகாரத்திலே இருந்தது என்னமோ வாஸ்தவம்தான்... இப்போ நான் ஒரு பொஸிஷனுக்கு வந்துட்டேன். அதையெல்லாம் நீ எழுதினா, என் 'இமேஜ்' போயிடும்! கொஞ்சம் யோசனை பண்ணி எழுது!" என்று கெஞ்சாத குறையாக முறையிட்டார்.

"எடத்தை காலி பண்ணுய்யா... இதை எழுது, அதை எழுதாதேன்னு நீங்களெல்லாம் சொல்லிதான் நான் எழுதணுமாக்கும்?" என்று ஆளவந்தாரை விரட்டியனுப்பினார்.

'**ப**ரதேசி நாயே' என்று ஆரம்பித்து எழுதப்பட்டிருந்தது அந்த மொட்டைக் கடிதம். 'உனக்கு என்ன தெனாவெட்டு இருந்தா சுயசரிதை எழுத நினைப்பே... சோமாறி! உனுக்கெல்லாம் இது ஒரு கேடா...? எங்க கட்சி தங்கத் தலைவர் தர்மலிங்கத் தோட நீ பழகிஇறே... அவரு இதுலே ஊழல் பண்ணினாரு, அதுலே உழப்பறி பண்ணினாரு, சின்னமுத்து கொலைக்கு இவருதான் காரணம், கற்பகத்தை கற்பழிச்சவரும் இவருதான்னு எதுனா எழுதி கிழுதி வைச்சே, பேமானி, உன்ன என் கட்சி ஆளுங்க சொம்மா வுட்டுடுவோம்னு நினைக்காதே... மவனே உடனே 'எழுதறதை நிறுத்திட்டேன்'னு உங்கிட்டேயிருந்து அறிக்கை வரலேன்னா உன்னோட அரை கை காணாத பூடும்.. ஆமாம்!"

'என்னையாடா மெரட்டறீங்க' என்று கொக்கரித்தபடி அந்தக் கடிதத்தை சுக்கு நூறாகக் கிழித்து எறிந்தார் சுப்பு.

**இ**த்தனைக்கும் சுப்புசாமி அட்டாடியொன்றும் அரசியல் சாணக்கியம் தெரிந்தவரல்ல. அந்தக் காலத்தில் சாணிக் கையால் எதிர் அணித் தலைவரின் போஸ்டரை அசிங்கப் படுத்த ஆரம்பித்து, படிப்படியாக முன்னேறி அதே தலைவரின் ஒரிஜினல் முகத்தையே ஆஸிட் தெளிப்பால் அசிங்கப்படுத்தும் நிலைக்கு உயர்ந்த ஒரு அடாவடி அரசியல் பேர்வழி. நாளொரு கட்சியும் பொழுதொரு தலைவருமாக அரசியலை கேலிக்கூத்தாக்கியவர். அனேகமாக எல்லா கட்சியையும் ருசித்துப் பார்த்தவராகையால், அனைத்து தலைவர்களின் ஆசாபாசங்களும் இவருக்கு அத்துப்படி.

இந்தக் காரணத்துக்காகத்தான் 'அதிரடி பப்ளிகேஷன்'காரர்கள் இவரை ஒரே அமுக்காக அமுக்கி ஆதாயம் தேட முயன்று,

**அகிலா கார்த்திகேயன்**

# "Take it Easy? Not for me!"



**எஸ்.**ஐ.சி.டி. காலேஜ் பஸ் ஸ்டாப்பில் வண்டி ஏறினால் தரமணி பாலிடெக்னிக் போய்ச் சேரும் வரை பாட்டு, டான்ஸ், கும்மாளம்தான். இப்படி தமது மாணவ வாழ்க்கையில் அடித்த லூட்டியைத்தான் 'ஊர்வசி ஊர்வசி...' என்ற பாடல் காட்சியாகப் 'பரிணாம வளர்ச்சி' யுறச் செய்திருக்கிறார் டைரக்டர் ஷங்கர். இன்றைக்குத் தமிழ்கூறும் நல்லுலகம் முழுவதும் Take of Easy Policy ஐ முணுமுணுக்கிறது. ஆனால் 'ஜென்டில்மேன்' ஷங்கருக்கு அந்தப் பாலிஸியில் நம்பிக்கை கிடையாது!

"எதையும் வித்தியாசமாய்ச் செய்ய வேண்டும்; பிரும்மாண்டமாய்ச் செய்ய வேண்டும் என்று நினைப்பவன் நான். எந்த விஷயத்துலயும் காம்ப்ரமைஸ் செய்து கொள்ளப் பிடிக்காது. முழு திருப்தி ஏற்படுகிற வரை விடமாட்டேன்..." படபடவென்று பொரிந்து தள்ளுகிறார் ஷங்கர்.

" 'ஜென்டில்மேனை' எடுக்க ஏழு மாதங்கள், 'காதலன்' முடிக்க பதினோரு மாதங்கள். இவ்வளவு தாமதம் ஏன்?" என்று நாம் கேட்கப் போகத்தான் மேற்கண்டபடிக்குப் படபடத்தார் ஷங்கர்.

"எனக்கு வேண்டியது ரிஸல்ட் சார்! அது கிடைக்கிறதா இல்லையா? அது தானே முக்கியம்...." என்கிறார்.

**ஷ**ங்கரின் சொந்த ஊர் கும்பகோணம். இவர் அப்பா ஷண்முகம் சென்னைக்குக் குடி பெயர்ந்து, பார்க்காத வேலையே இல்லை. கார் புரோக்கராகி ஓரளவு 'செட்டில'ான பிறகும் நான்கு குழந்தைகளுக்கு ஸ்கூல் ஃபீஸ் கட்டத் திணறினார். மூன்றாவது மகன் ஷங்கர். தி.நகர் ஹைஸ்கூலில் படித்து, பின்னர் பாலிடெக்னிக்கில் மெக்கானிகல் இஞ்சினியரிங் முதல் வகுப்பில் பாஸ் செய்து பி.ஈ. சேர ஆசைப்பட்டார். வசதி போதாததால் ஆசை நிறைவேறவில்லை. (ரைட்! ஜென்டில்மேன் கதைக் கரு இந்த அனுபவ அடிப்படைதான்!) ஒரு டைப்ரைட்டர் நிறுவனத்தில் வேலைக்குச் சேர்ந்து, நூறு ஊழியர்களை நிரந்தர

---

வெற்றி கண்டனர். தங்களைப் பற்றி சுப்பு சாமி தாறுமாறாக எப்படியும் எழுதி வைப்பார் என்று எல்லா தலைவர்களுக்கும் பயம் கண்டது. பயந்து கொண்டே சுயசரிதை எழுத வேண்டிய நிலையில் இருக்கும் இன்னாளில், சுப்புசாமி எழுதிக் கொண்டிருந்த சுயசரிதை பலருக்கு பயசரிதையாகி இம்சித்தது.

'**வா**ழ்வே அபாயம்' என்ற அமர்க்களமான டைட்டிலோடு சுப்புசாமியின் சுயசரிதை எழுதி முடிக்கப்பட்டு வெளியீட்டு விழாவிற்கு தேதியும் குறிக்கப்பட்டாயிற்று. புத்தகத்தின் உள்ளடக்கம் ரகசியமாகக் காப்பாற்றப்பட்டது.

அனைத்துக் கட்சிகளும் என்ன செய்வதென்று புரியாமல் தவித்தன. நாட்டின் எந்தத் தலைபோகிற சமாசாரத்துக்கும் ஒன்று கூடி தீர்வு காணாதவர்கள் இந்தப் பிரச்னைக்கு அவசரமாய்க் கூடி படுஒற்றுமையாக ஒரு முடிவெடுத்தனர்.

அதன்படி, 'அதிரடி பப்ளிகேஷன்'காரர்களிடம் ஒரு ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொண்டன. வெளியீட்டு விழா அன்றே பத்திரிகை விமர்சனப் பிரதிகள் உள்பட அனைத்துப் பிரதிகளையும் தங்களுக்கே விற்று விடும்படி கேட்டுக் கொண்டனர். அப்படியே மொத்தமாக வாங்கி எரித்து விட்டால் பிரச்னை தீர்ந்து விடுமென்று அவர்கள் எண்ணம். பிரகர கர்த்தாவிற்கு கசக்குமா! ஒவ்வொரு பிரதியும் ரூ. 350 என்று விலை வைத்திருந்தார். விதி யோக, விற்பனைக் கணக்குகளைக் கட்டிக்

மாக்கக் கோரி நடந்த போராட்டத்தில் ஈடுபட்டு, வேலை இழந்து...

மீண்டும்,

'டியர் சார்,

வித் ரெஃபரன்ஸ் டு யுவர் அட்வர்டைஸ்மென்ட்..........

யுவர்ஸ் ஃபெய்த்ஃபுல்லி.

ஷங்கர்.

இன்னொரு டைப்ரைட்டர் கம்பெனி. இம்முறை ஆபீஸ் பெருங்குடியில். தினம் போக வர நாற்பது கி.மீ. சைக்கிள் மிதித்தார் ஷங்கர். வேறு வேலை முயற்சிகளுக்குப் பலன் இல்லை.

**க**ல்லூரி நாட்களில் மிமிக்ரி, மோனோ ஆக்டிங் என்று செய்து வந்ததால், 'நடிக்க டிரை பண்ணேன்....' என்று மன உந்துதல். நடிகை சுமித்ரா நடித்துக் கொண்டிருந்த நாடகக் குழுவில் சில வாய்ப்புகள் கிடைத்தன.

எஸ்.ஏ. சந்திரசேகரின் அறிமுகம், அவரிடம் அஸிஸ்டன்டாகப் பணி, பிறகு 'நீதிக்குத் தண்டனை' படத்தில் சின்ன வேடம், அப்புறம் 'சீதா'வில் பெரிய ரோல் என்று படிப்படியாக மேலேறினாலும் பெரிய வரவேற்பு இல்லை ஷங்கருக்கு.

நடிப்பில் பெரிதாய் வர முடியும் என்ற நம்பிக்கை போய், 'டைரக்ஷன் தான் நமக்குத் தொழில்' என்ற முடிவுக்கு வந்த நிலையில், ஒரு நாள் எஸ்.ஏ. சந்திரசேகர் விட்ட செமத்தியான டோஸ் ஷங்கரை உசுப்பி விட்டது.

பம்பாயில் 'நண்பர்கள்' என்ற படத்தின் இந்தி டப்பிங் நடந்து கொண்டிருந்தது. அதில் நமக்கென்ன வேலை இருக்கிறது... என்று ஓட்டல் அறையிலேயே தங்கிவிட்டார் ஷங்கர். திரும்பி வந்த எஸ்.ஏ.சி., "இந்த வயசுல கஷ்டப்பட்டு உழைக்காவிட்டால் என்ன பிரயோஜனம்" என்று கடுமையாகத் திட்டியிருக்கிறார்.

"அவர் வார்த்தைகள் இன்றும் என் காதுகளில் ஒலிக்கின்றன" என்கிறார் ஷங்கர். "என் உழைப்புக்கும் முயற்சிக்கும் அந்த சம்பவம் ஒரு முக்கிய காரணம்."



• படப்பிடிப்பில்...

**ப**வித்ரனும் ஷங்கரும் ஒரே சமயத்தில் எஸ்.ஏ.சியிடம் உதவியாளர்களாய் இருந்த போது ஒப்பந்தம் போட்டுக் கொண்டார்கள். "உனக்கு முதலில் டைரக்ஷன் வாய்ப்பு வந்தால் நான்தான் அஸோஸியேட். எனக்கு வந்தால் நீதான் இணை டைரக்டர்."

பவித்ரனின் அசோஸியேட் ஆனார் ஷங்கர். 'சூரியன்', 'வசந்த காலப் பறவை' இரண்டிலும் இணை இயக்குனராய் இருந்து பின்னர் 'ஜென்டில்மனில்' டைரக்டராகி... the rest is his history!

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

---

காத்து, பணம் புரண்டு, லாபம் காண எத்தனை வருடம் ஆகுமோ? இந்த வழியில் ஒரே நாளில் ஜாக்பாட் போல ஐந்து லட்சம் லாபம்!

இப்படி யாரும் பிரிக்கவோ, படிக்கவோ இல்லாமல் தன் கற்பின் மேல் ஏற்பட்ட சந்தேகத்தால் சுப்புசாமியின் 'வாழ்வே அபாயம்' திக்குளித்தது.

**இ**துகுறித்து சுப்புசாமியிடம் பத்திரிகைக்காரர்கள் பேட்டி கண்ட போது அவர் அலட்டிக் கொள்ளாமல் சொன்னார்:

"அவனுங்க பொழுப்பத்த பசங்க சார்! அரசியல் அசிங்கத்தைப் பத்தி நான் ஒண்ணுமே எழுதலை! 'ஏதோ வாழ்க்கைக் குறிப்பு'னு கேட்டாங்களேன்னு என் சொந்த வாழ்க்கை பத்தி எழுதிக் கொடுத்தேன். நாற்பது வயசிலே குழந்தை பெத்தது, ஐம்பதில் முடி நரைத்தது, அறுபதில் பல் விழுந்ததுன்னு மொத்தம் பத்து அத்தியாயம் என் சுய வாழ்க்கையைப் பத்திதான் எழுதியிருக்கேன்.. டைத்தியக்காரங்க, அவங்கதான் இது தெரியாம குதிக்கறானுங்க. பய்ந்துகினு அத்தனை புத்தகத்தையும் கொளுத்தறானுங்க... நீங்களும் வந்து இப்பிடி கேட்கறீங்களே!"

மிகவும் சர்வசாதாரணமாக 'வாழ்வே அபாயம்' புத்தகம் எழுதியவர் சொல்லிக் கொண்டே போக, பத்திரிகைக்காரர்கள் கூட்டத்திலிருந்து 'வம்பு தும்பு' நிருபர் அவர் கழுத்தை நெறிக்கத் துணிந்த அபாயம் ஏற்பட்டது!

● "நம் மாநிலத்தில் உள்ள ஆர்.டி.ஓ. ஆபீஸ்களில் பார்க்க வேண்டியவர்களைப் பார்த்து, கொடுக்க வேண்டியதைக் கொடுத்தால், வண்டி ஓட்டத் தெரியாதவர்களுக்குக் கூட டிரைவிங் லைசென்ஸ் தரப்படுகிறது. இந்த கிரிமினல் குற்றத்தைத் தடுக்க முடியவில்லையே!"

- இப்படி அங்கலாய்ப்பவர் எதிர்க்கட்சி உறுப்பினர் என்று நினைத்தீர்களா? இல்லவே இல்லை; கேரள போக்குவரத்துத் துறை அமைச்சர் பாலகிருஷ்ண பிள்ளையின் புலம்பல்தான் இது! 'சேம் சைட் கோல்...?!

# இடிவாங்கும் சினிமா தியேட்டர்கள்!



● மைக்கேல் ஜாக்ஸனுக்குச் சொந்தமான பல லட்சம் மதிப்புள்ள இசைக் கருவிகள் இன்னும் டெல்லியிலேயே முடக்கப்பட்டுக் கிடக்கின்றன. அவற்றைத் திரும்ப அமெரிக்கா எடுத்துச் செல்ல, நீதிமன்றத் தடையுத்தரவு வாங்கியுள்ளார் ஜீவி. பெப்ஸியுடன் இணைந்து ஜீவி, ஸ்பான்ஸர் செய்த நிகழ்ச்சியை ஜாக்ஸன் முன்னறிவிப்பின்றி ரத்து செய்தது நினைவிருக்கும். பல கோடி ரூபாய் நஷ்டஈடு கோரி வழக்கு தொடர்ந்துள்ளார் ஜீவி. ஜாக்ஸன் மனம் மாறி, இந்தியா வந்து நிகழ்ச்சியை நடத்த பிற்பாடு ஒப்புக் கொண்டாலும் ஜீவி. அதை ஏற்கவில்லை. கோர்ட்டுக்கு வெளியே பிரச்னையை 'செட்டில்' பண்ண முடியுமா என்று முயன்று வருகிறாராம் மைக்கேல் ஜாக்ஸன்.

'பிளாக் ஆர் வைட்?' - இது ஜாக்ஸனுடைய சூப்பர் ஹிட் பாட்டு.



● பிரபலமான டெல்லி பத்திரிகையாளர் சிலருடன் டி.என். சேஷன், அம்ஜத் அலிகான், ஜஸ்டிஸ் கே. கே. வேணுகோபால் போன்றோர் ஒன்று சேர்ந்து 'ஜனசக்தி' இயக்கம் ஆரம்பித்திருக்கிறார்கள். ஊழல், சுற்றுப்புறமாசு, ஜனத்தொகை பெருக்கம், எழுத்தறிவின்மை ஆகியவற்றை எதிர்த்து விழிப்புணர்வு உண்டாக்குவது இயக்கத்தின் நோக்கம். அதான், வி. எஸ்., ஆர்.வி. போன்றவர்கள் இணைந்து ஒன்று ஆரம்பித்திருக்கிறார்களே, அத்துடன் சேர்ந்து பணியாற்றக் கூடாதோ? இதிலேயும் போட்டியா! இதனால்தானே எதையும் உருப்படியாகச் சாதிக்க முடியாமல் போகிறது!

● சபையர் தியேட்டரை இடிக்கும் பணி ஆரம்பிக்கப்படவுள்ளது. அதிமுக. தலைமையகம் அங்கே வரப்போவது தெரியும். இதுபோல் 'இடி'வாங்கிய வேறு சென்னை தியேட்டர்கள் : எலிஃபன்ஸ்டன், குளோப், உமா, வெலிங்டன், சன், ராஜகுமாரி, சராஸ், ராக்ஸி, புவனேஸ்வரி, சயானி, பிரபாத்... சாந்தி தியேட்டர் இருக்கும் இடத்திலும் ஒரு மாபெரும் ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ் வரவிருக்கிறதாம்....

இத்தகைய மந்தமான சூழ்நிலையிலும் சராசரியாக வாரத்துக்கு இரண்டு படம் ரிலீஸ் ஆகிறதே; சினிமா தயாரிப்பில் இறங்கும் மோகம் குறையவில்லையே, அதுதான் ஆச்சர்யம்!



● 'அரசு ஊழியர்கள் பத்து மணிக்குள் அலுவலகம் வர வேண்டும். அலுவல் நேரத்தில் சொந்த சீட் தவிர வேறு இடத்தில் காணப்படக் கூடாது. இதற்கு மேலதிகாரிகள்தான் பொறுப்பு!' இப்படி ஓர் ஆணை பிறப்பித்திருக்கிறார் கேரளத் தலைமைச் செயலர் ஆர். ராமச்சந்திரன் நாயர். சட்டசபையில், அரசு ஊழியர்களின் பொறுப்பற்ற நடத்தை பற்றி புகார் மேல் புகார் படிக்கப்படவே இவ்வாணை. அதுசரி, மேல் துண்டு போதாது; ஆளே சீட்டில் இருக்க வேண்டும் என்று ஆணையில் குறிப்பிடப்பட்டிருக்கிறதோ?

— மௌலி,
எஸ். எஸ். மணி.

# குமுறல்

டீவி நிகழ்ச்சிகளில் ஆபாசம்...

●● டீவி நிகழ்ச்சிகளில் ஆபாசம் மலிந்து விட்டது. சில காலம் முன் சன் டீவியில் ஆலோசனை நேரம் - என்ற சாதுவான தலைப்பில், விலைமாது ஒருத்தியின் விலா வாரியான பேட்டி ஒலி/ஒளிபரப்பாகியது. அடுத்து, டாக்டர் ஒருவரும் மருத்துவப் போர்வையில் ஆபாசத்தை அள்ளி வழங்கி னார். இருவரையும் பேட்டி கண்டது ஓர் இளம்பெண்! இதுபோன்ற நிகழ்ச்சிகள் நல் லோரையும் கெடுக்கும் இயல்புடையன. நிச் சயம் தடைவிதிக்கப்பட வேண்டும்.

சென்னை - 17, எஸ். வேங்கடேசன்.

●● சில வாரங்களுக்கு முன் "மனசுக் கேத்த மகாராசா" என்ற சினிமா படம் டீவியில் ஒளிபரப்பாகியது. இதில் கவுண்ட மணி தன் ஜால்ராக்களிடம் பேசும் மிக விரசமான வசனமொன்று கத்திரியின் கவன மின்மையால் அப்படியே ஒலி/ஒளிபரப்பாகி யது. எழுதவே கூச வேண்டியிருக்கிற இத்த கைய ஆபாசங்களை தூர்தர்ஷன் கண்டு கொள்ளாமல் ஒளிபரப்பாக அனுமதிப்பது பெரும் தவறு.

சிதம்பரம், என். சுந்தரி.

●● தொழில் வரி நிர்ணயிக்கப்பட்டுள்ள விதம் மிகவும் விசித்திரம். எனக்கு சம்பளம் ரூ. 5576. இதற்கு ரூ. 300 தொழில் வரி. ஆனால் ரூ. 4999 வரை சம்பளம் வாங்கும் ஒருவர் தொழில்வரியாக ரூ. 108 தான் கட்டு கிறார்! சம்பளம் படிப்படியாக உயர, தொழில்வரியும் படிப்படியாக உயரலாமே தவிர, ரூ. 4999 வரை ரூ. 108; ஒரு ரூபாய் கூட வாங்கினால் அதைப் போல் மும் மடங்கு என்றா வரி விதிப்பது?

சங்ககிரி, அ. சுப்பிரமணியம்.

●● நான் ஸ்டாண்டர்டு மோட்டார் கம்பெனியில் வேலை செய்து வருகிறேன். என்னைப் போல் சுமார் 3000 குடும்பங்கள், இந்தக் கம்பெனி மூடப்பட்டதால் நிர்கதி யாகி விட்டன. ஏழு வருஷங்களுக்கு முன் ரூ. 3000 சம்பளம் வாங்கி வந்த நான், தற் போது ரூ. 300க்கும் ரூ. 400க்கும் வாட்ச்மேன் உத்யோகம் கிடைத்தாலும் பார்க்கிறேன். எங்கள் தலைவர் தா. பாண்டியன், எம்.பி., "முதல்வருக்கு அறுபது கடிதங்கள் அனுப்பி யுள்ளேன். அவரோ ஒரு தடவை கூட அழைத்துப் பேசவில்லை" என்கிறார். எவ் வளவோ போராட்டங்கள் நடத்தியும் பயனின்றி, பழம்பெரும் ஸ்டாண்டர்ட் மோட்டார் கம்பெனியை கடைசியில் ஏலத் துக்குக் கொண்டு சென்று விட்டார்களே! எங்கள் எதிர்காலம் ஒரே இருள்மயம்.

தண்டலம், எஸ். நாதன்.

●● பம்பாய்க்கு முதல் முறை சென்ற போது ஒரு ஆட்டோ பிடித்து விலாசம் தந்தேன். என்னை ஏற்றிக் கொண்டு ஓரிடத் தில் நிறுத்தி, "அதோ தெரியும் மஞ்சள் கட்டி டம் தான் நீங்க போக வேண்டிய இடம். 'நோ என்ட்ரி' ஆதலால் நான் சுற்றி வளைத் துப் போனால் உங்களுக்கு அனாவசியச் செலவு ஆகும்" என்று கூறி இறக்கி விட்டார். கல்கத்தா, பங்களூர் போன்ற நகரங்களிலும் பண்பும் நேர்மையுமாக நடந்து கொள்கிறார் கள். ஆனால் சென்னை திரும்பும்போதோ, "ஐயோ சென்ட்ரல் வந்துடுச்சே! ஆட்டோ காரர்களிடம் சிக்கி, மீண்டும் வீடு போய்ச் சேர வேண்டுமே" என்ற கவலைதான் ஏற்படு கிறது. பலி ஆடுகள் போல் ரயிலை விட்டு இறங்கி வாசலுக்கு நடக்க வேண்டியிருக் கிறது!

சென்னை - 4, ஆர். எஸ். ராகவன்.

# க்ளெப்டோ வாதிகள்!

♦ தமிழக அரசின் தகிடுதத் தங்கள் பற்றி தலையங்கத்தில் சாட்டையடி கொடுத்திருக்கின் றீர்கள். பிரதம கணக்காயரே அறிக்கை விட்ட பிறகுதான் ஸ்பிக் பேர ஊழல் வெளிச்சத் திற்கு வந்திருக்கின்றது. மத்திய அரசு இந்த ஊழலைப் பற்றி விசாரிக்கின்றதோ இல்லையோ, குறைந்தபட்சம் பிரதம கணக்காய ரின் முகத்தில் ஆசிட் விழாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

♦ நோபல் பரிசு அராஃபத் துக்கு வழங்கப்படுவதில் தவறு இல்லை. பரீட்சையில் பெயி லான மாணவன், அடுத்த முறை நன்கு படித்து எழுதுவதில் லையா? இத்தகைய பரிசுகளும் கௌரவங்களும் எதிர்காலத்திலா வது போர் வெறி, இரத்த வேட்டை, இன வேற்றுமை இவற் றைக் களைந்தெறிய பேருதவி யாகவும் ஊக்கமாகவும் அமை யுமே!

அரக்கோணம்,

எல். கோபாலகிருஷ்ணன்.

♦ க்ளெப்டோமேனியா (டாக்டர் பேசுகிறார்) நோய் உள்ளவர் களுக்கு மற்றவரின் பொருள்களை எடுக்கிற நேரத்திலே மற்றவர்கள் பார்க்கிறார்கள் என்ற உணர்வோ, பயமோ இருக்கவே இருக்காது; அவர்கள் அதை பகிரங்கமாகவே கூடச் செய்வார்கள் என்ற வரிகளைப் படித்ததும் என் மனத்தில் நம் அரசியல் வாதிகளின் முகம் தானாகவே வந்தது!

திட்டக்குடி, ஏ. சரவணராஜன்.

♦ எம்.டி.வியில் வராத மேற்கத்திய இசை கல்கியில், வந்து விட்டதல்லவா? இனிமேல் எம். டி.வி.யிலும் பார்க்கலாம்.

திருச்சி - 21, எம். கணேசன்.

♦ மதியின் ஜோக் மழையில் நனைந்து ஜலதோஷமே பிடித்துக் கொண்டது சார்! பாராட்டுக்கள்.

விசலூர், ஜி. ஜி. கிருஷ்ணன்.

♦ அபெர்சர், ஸ்பீட் அட்ஜஸ்ட்மெண்ட் போன்ற காமிரா நுணுக் கங்களை பி.சி. ஸ்ரீராம், சிவசங்கரிக்கும் ஆனந்துக்கும் விளக்கி னாலும் அந்தப் போதனை என் போன்ற அமெச்சூர் போட்டோ கிராபர்களுக்குப் பல புதிய யுக்திகளை செய்து பார்க்கும் உணர் வைத் தோற்றுவித்தது!

மதுரை - 9,

இரா. கல்யாணசுந்தரம்.




♦ மேற்கத்திய (டீஃபே) இசைக் குழுவினர்கள் கூட தமது வழக்கமான கரடுமுரடு சத் தத்தை விட்டு விட்டு, மெல் லிசையில் ஆர்வம் காட்டும் இந்த வேளையில் நம்மூர் இசை வாதிகள் சிலர் வரட்டு கவுரவத் திற்காக நம் காதை மருத்துவம் பார்க்கும் அளவுக்குப் பதம் பார்ப்பதை நினைத்தால் கஷ்ட மாகத்தான் இருக்கிறது:

ஏத்தாப்பூர், காம்ப்ளி ப்ரியன்.

♦ "பயணம்" சிறுகதை நெஞ்சை நெகிழ்த்தியது. ஆசிரி யருக்குப் பாராட்டுக்கள்!

திருவிடைமருதூர், ஏ. சிந்துபாரதி.

♦ நவம்பர் 13 கல்கி "கொரிக்கக் கொஞ்சம்" பகுதியில் ஊரறிந்த குற்றவாளிக்கு known delinquent என்று வெளியிட்டு இருந்தீர்கள். Known Depredator (K.D.) என்பதே சரியான வார்த்தைகளாகும்.

சென்னை - 33, கே. கருப்பையா.

♦ கவிசிவம் எழுதும் 'கனவு மெய்ப்படும்' தொடர் கட்டுரை மிக எளிமை. மிக அருமை. வெகு இயல்பான கருத்துக்கள், மனத்தில் ஊடுருவிப் பதிந்து கொள்கின்றன. பாராட்டுக்கள்!

சென்னை - 91, என். கார்த்திகேயன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097, தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka